# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம்
நெல்வளமே நாட்டின்வளம்

சொற்சுவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம் (திருவிளையாடற்புராணம் – தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 3 விளைச்சல் : 20 திருவள்ளுவர் ஆண்டு 2053 சனவரித் திங்கள் – 2022


## உள்ளே...















# சூழலியல் கலைச்சொற்கள்

1.Soil drainage - மண்வடிகால்
2.Soil map - மண்வகை நிலப்படம்
3.Solar heat collector - சூரிய ஆற்றல் தேக்கி
4.Solarimeter - சூரிய ஆற்றல் அளவி
5.Soot particles - புகைக்கரித் துகள்கள்
6.Seismograph - நிலநடுக்க வரைவி
7.Salt -field - உப்பளம்
8.Sand dunes - மணற் குன்றுகள்
9.Sand storm - மணற்புயல்
10.Saw dust - மரத்தூள்
11.Sea breeze - கடற்காற்று
12.Flocculator - துகள் திரட்டி
13.Gene bank - மரபணு வைப்பகம்
14.Gyroscope - சுழல் நோக்கி
15.Ground fog - தரைப் பனிமூட்டம்
16.Humidifier - ஈரப்பதமூட்டி
17.Aeolian Soil - காற்றுக்குவி மண்
18.Aero space - காற்றுவெளி
19.Aetiology - நோய்க்காரண அறிவியல்
20.Agro biology - வேளாண் உயிரியல்
21.Agro ecology - வேளாண் சூழலியல்
22.Agroforestry - வேளாண் கானியல்
23.Barograph - வளியமுத்த வரைவி
24 Barometer - வளியமுத்தமானி
25. Vermicompost - மண்புழு எச்சு எரு

**சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.**


# சொல்வயல்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு
திருவள்ளுவர் ஆண்டு 2053 – தை
சனவரித் திங்கள் 2022

ஆசிரியர் : முனைவர் **கோ.விசயராகவன்**
இயக்குநர்

பொறுப்பாசிரியர் : முனைவர் வே.கார்த்திக்

இதழ்க்குழு : திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திரு. ப. தீபக்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர், சென்னை - 600 028.
கட்டணமில்லா அழைபேசி : 14469
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

# சொற்களைச் சொல்லிப் பழகுவோம்... புழங்கும் வரை

பழமையான மொழி, பண்பட்ட மொழி நம் பைந்தமிழ்மொழி. இது தேனினும் இனிய தீந்தமிழ் மொழி. தமிழ் என்றால் அழகு, தமிழ் என்றால் அமிழ்தம். இனிமையான எளிமையான மொழி நம் மொழி. உலகில் பெயரைக் கொண்டே மொழியின் தன்மையை அறியும் திறம் வேறு எந்த மொழிக்கும் கிடையாது. வேறு எந்த மொழியையும் பெயராகச் சூட்டிக் கொள்ளவும் முடியாது. சான்றாக, தெலுங்கு, இந்தி, கன்னடம். ஆனால், எம் அன்னைத் தமிழைப் பெயராகச் சூட்டிக்கொள்ள முடியும். தமிழ், தமிழ்ச்செல்வி, தமிழரசி, தமிழ்மாறன், தமிழ் இனியன் எனப் பற்பல பெயர்கள் சொல்லிக்கொண்டே போகலாம்.

உலகில் பழம்பெரும் மொழிகளாக அடையாளம் காணப்பட்ட மொழிகளுள் செம்மொழிக்குரிய தகுதிப்பாடுகள் தமிழ் மொழிக்கு முழுமையாகப் பொருந்தி உள்ளன.

அமிழ்தத்தைக் கடைந்தால் அனலிருந்து கிடைக்கும் அரிய சொல்லே தமிழ் என்று போற்றுகின்ற நாமக்கல் கவிஞர் தெள்ளூற்ற தமிழமுதின் சுவை கண்டார். புதிய கருத்துகளை உள்வாங்கிக்கொண்டு அவற்றிற்கே உரிய சொல்லாக்கங்களைத் தமிழில் உருவாக்கிக்கொள்ளக்கூடிய தனித்தன்மை தமிழுக்கு இயல்பு. பழமையும் வளமையும் கொண்ட தனித்தியங்கும் மூத்த மொழி தமிழ். தமிழ்மொழி இயல்பாகவே தனித்து இயங்கக்கூடியது. அதற்குப் பிற மொழிகளின் துணை தேவையில்லை. மிகுந்த சொல்வளம் கொண்டது தமிழ் மொழி. எந்தக் கருத்தையும் தன் வளத்தைக் கொண்டே உணர்த்தக்கூடிய ஆற்றல் தமிழுக்கு உண்டு.

நாம் ஒன்றைக் கவனிக்க வேண்டும். தமிழ்மொழியில் ஒரு சொல் இல்லாமல் இருந்தால் அதை வேறு மொழியில் இருந்து தருவித்துக் கொள்ளலாம். ஆங்கிலமும், ஐரோப்பிய மொழிகளும் இதைச் செய்வனே செய்கின்றன. ‘தமிழரிடத்தில் தமிழில் பேசுவோம்’ என முதலில் கூறுவோம். அனைவரும் பிறமொழிச் சொற்களின் கலப்பை அறவே நீக்கி மொழிநலம் பெற பாடுபட வேண்டும்.

மெட்ராஸ் என்று இருந்ததைச் சென்னை என்று மாற்றியபோது ஏற்பட்ட வினாக்கள் இன்று மறைந்துவிட்டதை நாம் காணமுடிகிறது. ஒரு மாற்றம் செய்யும்போது இருக்கும் கேள்வி முறையான பயன்பாட்டிற்குப் பின் மறைந்து விடுகிறது.

| | |
|---|---|
| டி.வி. | தொலைக்காட்சி |
| ரேடியோ | வானொலி |
| லைவ் | நேரலை |
| சினிமா | திரைப்படம் |
| கம்ப்யூட்டர் | கணினி |
| ஜன்னல் | சாளரம் |
| ஜோடி | இணை |
| யாத்ரா | திருச்செலவு |
| ஜெயம் | வெற்றி |
| ஃபைல் | கோப்பு |

(வந்த புதிதில் பலருக்கு அன்று புதிது. ஆனால், இன்று இச்சொல் புழக்கத்தில் உள்ளது).

| | |
|---|---|
| இரதம் | தேர் |
| ருசி | சுவை |
| வயது | அகவை |
| விருது | பட்டம், சிறப்பாரம், பரிசு |

(வயதையும், விருதையும் நாம் தமிழ்ப்படுத்திவிட்டோம் என்று கூட கூறலாம்).

நம்மில் எத்தனை பேர் இச்சொற்களைப் பயன் படுத்துகிறோம்!

தமிழில் பேசினால் தரம் குறைவு என்று நினைக்கும் மக்களும் இருக்கத்தான் செய்கிறார்கள். அவர்களின் எண்ணம் மாற்றப்பட வேண்டியது இன்றியமையாதது. இவ்விதம் நம் மொழி நிலைக்க தமிழில் பெயர் வைக்கும் திரைத்துறையினருக்கு வரி விலக்கும் செய்யப்பட்டுள்ளது.

| | |
|---|---|
| Railway Station | தொடரி நிலையம் |
| Judge | நீதியரசர், நீதிபதி |
| Xerox | ஒளிப்படி |
| Certificate | சான்றிதழ் |
| Room | அறை |

| | |
|---|---|
| Cheque | காசோலை |
| Congratulation | நல்வாழ்த்துகள் |
| Company | குழுமம், நிறுவனம் |
| Internet | இணையம் |
| Platform | நடைமேடை |
| Admission | சேர்க்கை |
| Bonafide Certificate | ஆளறி சான்றிதழ் |
| Flash news | சிறப்புச் செய்தி |
| Layout | வடிவமைப்பு |
| Car | மகிழ்வுந்து |
| Auto | தானி |
| Bus | பேருந்து |
| Hotel | உணவகம் |
| Lift | மின்தூக்கி |
| Number | எண் |
| Licence | உரிமம் |
| Pen | தூவல் |
| Visiting Card | காண்புச் சீட்டு |
| Attitude | அணுகீடு |
| Lucky | நல்லூழ் |

ஊன் அப்பமும் (பர்கர்), பொதியப்பமும் (பீட்சா) உங்களுக்குப் பிடிக்குமா? திணியடை (பப்ஸ்) சாப்பிட்டுக்கொண்டே கதைக்கலாமா? தானியங்கி பணப் பொறியில் (ஏ.டி.எம்.) பணம் எடுத்து கடற்கரைக்குச் சென்று அதன் அழகைக் கண்டு மகிழ்வோமா? என இது போல் நாம் பேசினால், கேட்போர் நம்மைப் பார்த்து நகைத்துக் கொண்டே நீங்கள் என்ன கூறுகிறீர்கள் எனக் கேட்பர். இன்றைக்கு நம் மக்களிடையே அதிகப்படியான ஆங்கிலச் சொற்கள் புழக்கத்தில் உள்ளன. அவை அன்றாடம் பயன்படுத்தும் தேவையான சொற்களாகவும் உள்ளன.

| | |
|---|---|
| Call taxi | அழைப்புந்து |
| Noodles | இழையுணவு |
| Memory card | நினைவுச் சில்லு |
| Fruit salad | பழக்கூட்டு |
| Pen drive | குறும்பதிவி |
| Peak hours | உச்ச நேரம் |

இப்படிப் பெரும்பான்மைச் சொற்கள் தவிர்க்க முடியாததாகிவிட்டன. இவை அப்படியே புழக்கத்தில் இருந்தால் நம் தமிழ்மொழிச் சொற்கள் பயன்பாட்டிலிருந்து மெல்ல விலகி விடும்.

எனவே, இவைபோன்ற ஆங்கிலச் சொற்களுக்கு இணையான தமிழ்க் கலைச்சொற்களை வடிவமைத்து, “சொற்குவை“ வலைத்தளத்தின் வழியாக உலக மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டுவரும் மொழிக் காப்புப்பணியைச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் பலதுறை சார்ந்த ஆன்றோர் பெருமக்களின் துணையுடன் திறம்பட செய்து கொண்டிருக்கிறது. இந்த மொழிக்காப்புப் பணிக்குத் துணைநிற்கும் அகராதியியலாளர்கள், சொல்லாக்க வல்லுநர்கள், மொழியியலாளர்கள், தமிழறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், மாணவர்கள் உள்ளிட்ட அனைவருக்கும் இவ்வியக்ககத்தின் சார்பில் நன்றி நவில்கிறேன்.

மொழியிலுள்ள சொற்கள் வெறுமனே அவற்றிற்கான பொருள்களை மட்டும் கொண்டிருப்பதில்லை. அம்மொழி பேசும் மக்களின் நீண்டநெடிய வாழ்க்கை வரலாற்றையும் சொற்கள் தங்களுக்குள் தாங்கிக்கொண்டுள்ளன. எனவே இனத்தின் வரலாற்றுப் பெருமையை மீட்டெடுக்கவும், போற்றிக் காக்கவும் தாய்மொழிச் சொற்களை உயிர்ப்புடன் வைத்திருக்க வேண்டும். புழங்கும் சொற்களே உயிர்ப்புடன் இருக்கும் .

அகம் புறம் என வகுத்து வாழ்வுக்கே இலக்கணம் வகுத்த வண்டமிழ் மொழி நம் மொழி. இலக்கணம், இலக்கியம் என வளம் குன்றாமல் நம் மொழி வாழ சொற்களைச் சொல்லிப் பழகுவோம்... புழங்கும் வரையில். ‘அமிழ்தான தமிழை அகத்தில் நினைப்போம்! உயிரான தமிழை உள்ளத்தில் கொள்வோம்’. ‘தமிழ் எங்கள் உயிர்’ என்ற உணர்வோடு வாழ்வோம்.

இம்மாதச் “சொல்வயல்“ இதழுக்குத் தமிழறிஞர்கள் திருமிகு நா. கோவிந்தசாமி, திருமிகு. மறையரசன், திருமிகு. ரெங்கசாமி ஆகியோரின் கட்டுரைகள் அணிசேர்த்துள்ளன. அப்பெருந்தகைகளுக்கு என் மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

சென்ற இதழின் தொடர்ச்சியாக, இலங்கையில் தமிழ் நோக்குநூல்களின் வளர்ச்சிப் போக்குகள் எனும் பொருண்மையிலான ஆய்வுக்கட்டுரையின் நிறைவுப்பகுதியை வழங்கியுள்ள ஞாலமறிந்த அகராதியியல் அறிஞர் முனைவர் ச.சச்சிதானந்தம் ஐயா அவர்களுக்கும், “திருக்குறள் கூறும் அகராதியியல் கூறுகள்“ என்ற பொருண்மையில் சிறந்ததொரு ஆய்வுக்கட்டுரையை வழங்கி அணிசேர்த்திருக்கின்ற திருமதி ஞானா சச்சிதானந்தம் அவர்களுக்கும், இவ்வியக்ககம் நெறிப்படுத்தும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்குகளில் பங்கேற்றுத் தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றிய பலதுறை சார்ந்த அனைத்துத் தமிழுள்ளங்களுக்கும் அகம்நிறை அன்பு நன்றியை உரித்தாக்குகிறேன்.

தமிழ் என்னும் ஒற்றைப்புள்ளியில் ஒருங்கிணைந்த உள்ளத்தினராய் என்றென்றும் ஒருங்கிணைந்து செயலாற்றுவோம்.

செயலால் பேசுவோம்...

# திருக்குறள் கூறும் அகராதியியல் கூறுகள்



**திருமதி ஞானா சச்சிதானந்தம்**

அதிபர், தமிழாசிரியர்
பன்னாட்டு தமிழாய்வு உயர் கல்வி நிறுவனம் பிரான்சு
நூலாசிரியர்: தெளிவான பிரெஞ்சு இலக்கணம்.
தமிழ் கற்பதற்கான முன்னேற்ற வழிகாட்டி

ஒரு மொழியின் சிறப்பானது அம்மொழியின் பழமை வாய்ந்த இலக்கியங்கள், கலைப்படைப்புகள் என்பவற்றைச் சான்றாகக் கொண்டுள்ளது. அவ்வகையில் தமிழ்மொழியின் மகுடமாக விளங்குவது திருக்குறள். இலக்கியம், இலக்கணம், அகராதி ஆகியன ஒரு மொழியின் மும்முகங்கள்! திருக்குறள் கிட்டத்தட்ட எண்பது மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்ட உலகநூலாக விளங்குகிறது. 'சிறந்த எண்ணம், சிறப்பான மொழிநிலை, செம்மையான கவிதைப்பண்பு ஆகியவற்றைக் கொண்டது' இலக்கியம் என்றார் திருக்குறளைப் பிரெஞ்சில் மொழிபெயர்த்த பிரெஞ்சியரான ஏரியல் (Aeriel).

திருவள்ளுவர் உயர்ந்த அறிவும், ஆழ்ந்த அனுபவமும் ஆராய்ச்சித்திறனும் உடைய ஓர் அற்புத அறிஞர். திருக்குறள் பொருட்செறிவும் கருத்தாழமும் மொழித்திறனும் உடைய அறிவு நூல். திருக்குறளினை ஆழ்ந்து படிப்போர் எவரும் முப்பாலான இந்நூல் பற்றியும், இதில் கையாளப்பட்ட மொழி பற்றியும் குறிப்பிடாமல் இரார்! முப்பால் மனிதன் தனது சகமனிதாரிடம் தொடர்பு கொள்ளுங்கால் கடைப்பிடிக்க வேண்டிய ஒழுக்கத்தைத் திருவள்ளுவர் 2660 வரிகளில் வலியுறுத்துகிறார்.

சொல்லுக்கும் பொருளுக்கும் இடையிலான உறவுதான் மொழி. சொற்களின் பொருள்களை விளக்குவதுதான் அகராதி. சொல்லுக்கும் அது குறிக்கும் பொருளுக்கும் இடையிலான உறவானது, ஒரு சொல் பல்பொருள் தன்மை, பலசொல் ஒரு பொருள் தன்மை, எதிர்த்தன்மை, மீச்சொல் என நான்குவிதமாக அமைகின்றது. மொழி ஒன்றுக்கு அல்லது பல மொழிகளுக்கு உரித்தான சொல்லியல் கூறுகளை உற்றுநோக்கித் திரட்டித் தெரிவு செய்து, வகைப்படுத்தி அகராதி வடிவில் விளக்கும் ஒரு துறையாக அகராதியியல் அமைகின்றது. இவை அனைத்தையும் (சொல் திரட்டல், சொல் தெரிவு) அடக்கியதாக திருவள்ளுவரின் ஆக்கப்பணி அமைகின்றது. திருவள்ளுவர் எனும் சமூகநல அறிஞரின் நல்லறிவு கவித்துவ வீரியமுள்ள குறள்கள் வழி அகராதியியற் கூறுகள் பற்றி ஆராய முற்படுகின்றது இக்கட்டுரை.

திருவள்ளுவ நாயனார்கூட, 'அகரமுதல எழுத்தெல்லாம்' என்று தனது முதற் குறட்பாவைத் தொடங்கி 1330ஆவது குறளை முடிக்கும்போது, ஊடுதல் காமத்திற்கு இன்பம், அதற்கு இன்பம் கூடி முயங்கப்பெறின் என்றே முடிப்பதால் அவரது திருக்குறளிலும்கூட அகரவாரிசையில் ஆரம்பமும் முடிவும் அமையும் நிரல்வரிசையையும் அகரவரிசைக்கு, அதாவது அகரமுதலிக்கு இலக்கணமாகக் காணமுடிகின்றது. தமிழின் முதல் அகராதியான சதுரகராதியைத் தந்த வீரமாமுனிவர் 1886ஆம் ஆண்டில் திருக்குறளுக்காகத் தனி அகராதியையும், சொற்குறிப்பு அகராதியையும் தொகுத்து அளித்தார் என வரலாறு கூறுகிறது.

## திருக்குறளின் வெட்டுமுகம்

மனிதனுக்கு அடிப்படையில் வேண்டியது இன்பம். இன்பத்தை அடைவதற்குத் துணையாவது பொருள். இன்பமும் பொருளும் அறத்தால் கிடைப்பதே நன்று என்பதே திருவள்ளுவாரின் கொள்கை.

திருக்குறள் அறத்துப்பால், பொருட்பால், காமத்துப் பால் (இன்பத்துப்பால்) எனும் 03 பால்களை (முப்பால்) கொண்டது. ஒவ்வொரு பாலும் இயல்களாகப் பிரிக்கப்பட்டு, 13 இயல்களில் 133 அதிகாரங்களின் கீழ் தொகுக்கப்பெற் றுள்ளன. அறத்துப்பாலில் 38 அதிகாரங்களும், பொருட்பாலில் 70அதிகாரங்களும். காமத்துப்பாலில் 25 அதிகாரங்களும் அமைந்துள்ளன. ஒவ்வோர் அதிகாரத்திலும் 10 குறள்கள் உள்ளன. ஆக 133 அதிகாரங்களில் 10 குறள்களாக மொத்தம் 1330 குறள்கள் உள்ளன.

திருக்குறளில் உட்பொதிவாக அகரவரிசைப்படி, அடக்க முடைமை தொட்டு வெருவந்த செய்யாமை என 133 அதிகாரங்கள் உள்ளன. தொல்காப்பியத்தில், எழுத்ததி காரத்தில் எழுத்துகள் பற்றி முதற்பாவில் வரும் *'எழுத்து எனப்படுவ அகரம் முதல் னகரம் இறுவாய்'* என்பதற்கு ஏற்ப, முப்பாலின் முதலாவது குறள் 'அகரத்தில்' தொடங்கி இறுதியான1330 ஆவது குறள் 'னகரத்தில்' நிறைவுறுகிறது.

எழுத்து எனப்படுவ அகரம் முதல் னகரம் இறுவாய் முப்பஃது என்ப - தொல்காப்பியம் எழுத்ததிகாரம் 1.

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு. - குறள் 1

ஊடுதல் காமத்திற்கு இன்பம் அதற்கின்பம்
கூடி முயங்கப் பெறின். - குறள் 1330.

## திருக்குறளில் தொல்காப்பிய நெறிகள்

| | |
|---|---|
| 'எழுத்து எனப்படுவ **அ**கரம் முதல் **ன**கரம்இறுவாய்... | அகரமுதல வெழுத்தெல்லா மாதி பகவன் முதற்றே யுலகு. |
| எழுத்ததிகாரம் : தொல். | கடவுள் வாழ்த்து : திருக்குறள் . |

நிறைமொழி மாந்தர் ஆணையிற்கிளந்த
மறைமொழிதானே மந்திரமென்ப - தொல். பொருள். 490
நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும். - குறள் 28

## திருக்குறளில் அகராதியியல்

சொல்லுக சொல்லின் பயன் உடைய சொல்லற்க
செல்லின் பயன்இலாச் சொல் – குறள்200

இக்குறள் தான் அகராதிக்கும் வரைவிலக்கணம்! தமிழ் அகராதியியல் அமைப்பிற்கும் தொகுப்பிற்கும் தொல்காப்பிய உரியியல் ஆதாரமாகின்றது. பொருள் கூறப்படும் அல்லது விளக்கப்படும் சொற்கள் அகரவரிசை ஒழுங்கில் அமைதல் என்பதே அகராதி என்பதற்கான அடிப்படை விளக்கம் ஆகும். இதனை முதற்குறளே (அகரமுதல எழுத்தெல்லாம்) தொடக்கி வைக்கின்றது. அகராதிகள் உலகமொழிகளில் தொகுக்கப்பட்ட ஆரம்பகாலத்தில், சொல்லகராதிகளில் (vocabulario) சொற்கள் பொருட்புல வரிசைகளிலேயே தொகுக்கப்பட்டன. இப்பொருட்புல வரிசையில் முதலாவது, இரண்டாவது புலங்களாக, கடவுள், வான் என்பனவே இடம்பெறச் செய்யப்பட்டன. அதே ஒப்புமையைத் திருக்குறளிலும் முதலாவது கடவுள் வாழ்த்து, இரண்டாவது வான் சிறப்பு அதிகாரங்களில் இடம்பெறுவதைக் காணலாம்.

> திருக்குறளில் 42,194 எழுத்துகளும், 12,000 சொற்களும் உள்ளன. இதில், அலி தொடக்கம் வித்தகர் வரையிலாக 49 வடமொழிச்சொற்கள் உள்ளன என, திருக்குறள் புலவர் என்.வி.கலைமணியின் சொற்பொருள் சுரபி எனும் நூலில் உள்ளது. ஒட்டுமொத்தச் சொற்களில் 100க்கு 33 சொற்கள் உயிரெழுத்தை முதலெழுத்தாக உடையனவாக உள்ளன. தமிழ்மறையில் முதற்குறள் முதலாவது எழுத்தான 'அ'இல் தொடங்குகிறது. கடைசிக் குறள் 246ஆவது எழுத்தான 'ன்' இல் முடிகிறது. திருக்குறளில் இல்லாத உயிரெழுத்து 'ஔ'

## திருக்குறளில் தம்பொருள் காணும் மதங்கள்

வள்ளுவர் எழுதிய திருக்குறள் ஓர் நீதிநூல். அது ஒரு மதநூல் அல்ல. அறம், பொருள், இன்பம் என்னும் முப்பால் கூறும் நூல்.

வள்ளுவர் சில அதிகாரங்களிலும் ஏழு சொற்கள் கொண்டமைந்த குறள்களிலும் கூறி நிற்கும் கருத்துகள் இந்தியாவில் இருந்த மதங்கள் கூறும் நெறிகளை எடுத்தியம்பி நிற்கின்றன. இதனால் ஒவ்வொரு மதத்தவரும் குறள்களின் பொருள்களைத் தத்தம் மதத்துக்குரிய கருத்துகளுடன் உள்வாங்கி விளக்கங்களைக் கூறிவிடுகிறார்கள். ஆனால் திருக்குறளின் குறள்கள் சமணக் கோட்பாடுகளை அதிகம் கூறினாலும், முழுமையாக எந்தத் தனியொரு மதத்தின் முழுக்கோட்பாடுகளையும் ஒருங்கே உணர்த்துவதாகக் காணப்படவில்லை.

கடவுள் இருப்புக்கோட்பாடு, கடவுள் மறுப்புக் கோட்பாடு, ஓரிறைக் கோட்பாடு, பல்லிறைக் கோட்பாடு, வேள்விக் கோட்பாடு, வேள்வி மறுப்புக்கோட்பாடு ஆகிய மதக்கோட்பாடுகளுக்கு ஏற்பாகவும் மறுப்பாகவும் குறள்களுக்கு உரை வழங்கியோர் விளக்கங்கள் அளித்துள்ளனர்.

பரிமேலழகர், தருமர், வீரமாமுனிவர், ஜி.யூ.போப், மு.வ., பாவாணர், இளங்குமரனார், கலைஞர், சாலமன் பாப்பையா, மோகனராசு ஆகியோர்களது உரை ஒரே மாதிரியான விளக்கவுரையாக இராது. சைவ உரை, சமண உரை, சாங்கிய உரை, பௌத்த உரை, கிறித்தவ உரை, பகுத்தறிவு உரை, இலக்கிய உரை, ஆராய்ச்சி உரை என எழுதினவர் நோக்குக்கும் போக்குக்கும் ஏற்ப மாறுபட்ட உரைகளும் வெளியிடப்பட்டுள்ளன.

திருக்குறளில் முதலாவது அதிகாரமாகக் கடவுள் வாழ்த்து என்பது காணப்பட்டாலும் அவ்வதிகாரத்தில் வரும் 10 குறள்களில் ஓர் இடத்திலும் கடவுள் எனும் சொல் ஆளப்படவில்லை. அவ்வதிகாரத்தில் கடவுளைச் சுட்டுவதற்கு 1. பகவன். 2. வாலறிவன். 3. மலர்மிசை ஏகினான். 4.வேண்டுதல் வேண்டாமையிலான். 5. இறைவன். 6. பொறிவாயில் ஐந்தவித்தான். 7. தனக்குவமை இல்லாதான். 8. அறவாழி அந்தணன். 9. எண்குணத்தான். 10. இறைவன் ஆகிய சொற்களும், பிற அதிகாரங்களின் சில இடங்களில் தாமரைக் கண்ணான், பற்றற்றான் .. முதலான சொற்களையும் கையாண்டிருக்கிறார். இச்சொற்கள் எல்லாம் சைவத்தினதும், சமணத்தினதும் கடவுளர்க்கு அதிகம் பொருந்துவதாகப் புலப்படுகின்றன. பழந்தமிழர் காலத்தில் பரம்பரையாக நிலவிய சில சமயக் கருத்துகளையும் அக்காலத்தில் பொதுமக்களிடையே காணப்பட்ட பொதுவான அறக்கருத்துகளையும் ஏற்று திருவள்ளுவர் குறள் செய்திருக்கிறார்.

❖ முதற்குறளுக்கு அவரவர் தரும் விளக்கங்கள் : **ஆதி பகவன்** யார் என்பதிலே தான் முரண்!

(1). ஆறுமுகநாவலர் பரிசோதித்துப் பதிப்பித்த பரிமேலழகர் உரை.

அகரமுதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு.

இதன் பொருள், எழுத்துகளெல்லாம் அகரமாகிய முதலையுடையன. அதுபோல உலகம் ஆதிபகவனாகிய முதலையுடைத்து.

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன். முதற்றே உலகு.

(2) சமணர் உரை: சமண சமயத்தில் கடவுள்களில் தீர்த்தங்கரர் எனப்படும் 24 பேரில் முதல்வராகிய இடப தேவரையே ஆதிபகவன் எனக் குறிப்பிட்டார் எனச் சமண உரைகள் கூறுகின்றன – குறள் கூறும் சமயம். பக். 199

(3) சைவர் உரை: சைவசமயத்தில் கடவுள்களில் முதல்வராகிய சிவனையே ஆதிபகவன் எனக் குறிப்பிட்டார் எனச் சைவ உரைகள் கூறுகின்றன – குறள் கூறும் சமயம். பக். 201

(4) புத்தர் உரை: பௌத்தசமயத்தில் புத்தரைப் பகவான் எனக் கூறும் வழக்கு உண்டு – குறள் கூறும் சமயம். பக். 202

(5). வள்ளலார் உரை : இதன் பொருள், – ஆதிபகவன் ஆதியாகிய ஒளி (பகவன் ஒளிக்கடவுள். சோதி) அருட் பெருஞ் சோதியே உலகிற்கு முதற்கடவுள் – தமிழியம் பக். 225.

(6) கிறித்தவர் உரை : ஆதிபகவன் என்ற தொடரை, என்றுமுள கடவுளே பரமபிதா எல்லா உலகங்களிலும் தலைவராக உள்ளார் (in all theworlds, the eternal god is chief ) என்று திருக்குறளை ஆங்கிலத்தில் Ellis மொழி பெயர்த்தார் – திருக்குறளும் விவிலியமும்

(7) திராவிடர் இயக்கக் கருத்து : ஆதிபகவன் பச்சைப் புளுகு. வள்ளுவரை மட்டுப்படுத்த வேண்டும் என்பதற்காகப் புகுத்தப்பட்ட ஒரு கதை. – திருக்குறளும் பெரியாரும். பக்கம்: 58

(8) நியாயம் **வைசேடிக** (மறைந்துபோன மதப்பிரிவு) உரை: அநாதியே உள்ள அணுக்களின் கூட்டமே உலகம் எனும் கோட்பாட்டில் ஆதிபகவன் முதற்றே உலகு. – குறள் கூறும் சமயம்.

(9). சாங்கியம் உலகாயுதம் (மறைந்துபோன மதப்பிரிவு) உரை: அநாதியே உள்ள பிரகிருதியின் பல தோற்றங்களே உலகும் உலகப்பொருட்களும் எனும் கோட்பாட்டில் ஆதிபகவன் முதற்றே உலகு. – குறள் கூறும் சமயம்.

(10). சற்குரு சிவாய சுப்ரமுனிய ஸ்வாமி உரை : 'ஆதிபகவன் முதற்றே உலகு' – என்பது இஸ்வஷிய உபநிடதத்தில் உள்ள 'இஸவஷியம் இடம் ஸர்வம்' என்பதை நினைவூட்டுகின்றது. – Weaver's wisdom

(11). 'ஆதிபகவன்' எனுந் தொடரில் உள்ள 'பகவன்' என்ற சொல்லிற்குப் பிரமன், விஷ்ணு, சிவன், புத்தன், அருகன் எனப் பொருள்கள் வழங்கப்பெறுகின்றன. எனவே பலபொருள் ஒரே சொல்லாகவே கொள்ளலாம். 'பகவன்' என்ற சொல் ஐசுவரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம் எனும் 6யும்; உடையவன் என்றும், பூத உற்பத்தி, முடிவு, வரவு, செலவு, அவித்தை என 6யும் அறிபவன் என்றும் பலர் பலவாறாகப் பொருள் கொள்வர். – தமிழியம் பக். 231

- 'பகவன்' என்ற சொல் தமிழ்ச் சொல் என்று சொல் அந்த உச்சரிப்புக்கூட இடம் தரவில்லை. – கி.வீரமணி.திராவிடர் கழகம்.

- 'பகவன்' தென்சொல்லே. பகுத்தளிப்பவன், படியளப்பவன் என்பது பொருள். – ஞா.தேவநேயப் பாவாணர். கிறித்தவர்களின் திருக்குறள் கொடை. பக்.40.

### திருக்குறள் கூறும் அகராதியியல் கூறுகள்

- ஒருசொல் பல்பொருள் : பொருள் – பொருள். விளக்கம். செல்வம். அறிவு. முக்கியத்துவம்.

- பலசொல் ஒருபொருள் : கடவுள் – பகவன். வாலறிவன்; இறைவன்., நட்பு – கேண்மை, உதவி, நன்றி

- காணப்படும் இலக்கணக்கூறுகள் :

  பெயர் : நட்பு x பகை

  பகைநட்பாம் காலம் வருங்கால் முகநட்(டு)
  அகநட்பு ஒரீஇ விடல். குறள் 830

  பெயரடை : சிறு x பெரு

  சிறுகாப்பிற் பேரிடத்த(து) ஆகி உறுபகை
  ஊக்கம் அழிப்பது அரண். குறள் 744

  வினையடை : கடிது x மெல்ல

  கடி(து) ஓச்சிமெல்ல எறிக, நெடி(து) ஆக்கம்
  நீங்காமை வேண்டு பவர். குறள் 562

  வினையெச்சம் : மிகின் x குறையின்

  மிகினும் குறையினும் நோய்செய்யும், நூலோர்
  வளிமுதலா எண்ணிய மூன்று. குறள் 941

- சொல்முரண் : மாலை x காலை

  மாலை நோய் செய்தல் மணந்தார் அகலாத்
  காலை அறிந்தது இலேன் குறள் 1226

- எதிர்த்தன்மை : மேல் x கீழ், பெருமை x சிறுமை

  மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர் கீழிருந்தும்
  கீழல்லர் கீழல் லவர் குறள் 973

- பணியுமாம் என்றும் பெருமை சிறுமை
  அணியுமாம் தன்னை வியந்து குறள் 978

- முரண்(கள்) கொண்ட தொடர் :

  சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
  சொல்லிற் பயனிலாச் சொல் குறள் 200

- பொருள் விளக்கம் : சில சொற்களுக்கு விளக்கம் கொடுக்கும் போது, 'யாதெனின்' எனும் சொல்லினைக் கையாண்டு பதினொரு குறள்களில் அதிஅற்புதமாக வரையறைகள் கொடுக்கின்றார்.

1. வாய்மை எனப்படுவது யாதுஎனின் யாதுஒன்றும்
   தீமை இலாத சொலல் குறள்291
2. நட்பிற்கு வீற்றுஇருக்கை யாதுஎனின் கொட்புஇன்றி
   ஒல்லும்வாய் ஊன்றும் நிலை குறள் 789
3. வெண்மை எனப்படுவது யாதுஎனின் ஒண்மை
   உடையம்யாம் என்னும் செருக்கு குறள் 844

- விந்தையான தொடரமைப்பு :

| | |
|---|---|
| எழுவாய் | பயனிலை |
| வசையொழிய வாழ்வாரே | வாழ்வார் |
| எழுவாய் | பயனிலை |
| இசையொழிய வாழ்வாரே | வாழாதவர் |

  வசையொழிய வாழ்வாரே வாழ்வார்இசையொழிய
  வாழ்வாரே வாழா தவர் குறள் 240

- வள்ளுவத்தில் அதிகம் காணலாகும் சொற்கள் :

| காணலாகும் சொற்கள் | எண்ணிக்கை | காணலாகும் சொற்கள் | எண்ணிக்கை |
|---|---|---|---|
| படும் | 42 | வரும், வேந்தன், ஆற்றின் | 13 |
| தரும் | 37 | மன்னவன், தார் | |
| இல் | 32 | பெருமை | |
| கெடும் | 29 | | |
| என்னும் | 24 | ஆக்கம, கேண்மை, | 12 |
| இல்லை, செயல் | 22 | சொல், என்று, துணை, | |
| எல்லாம், தலை காமம், | 21 | பிற, இனிது | |
| கொளல் பவர், பெறின், தவர் | 20 | நெஞ்சு, என்பது, செல்வம் | 11 |
| இன்பம், விடல், உலகு அரிது கண்ணும், யவர் | 18 | | |
| விடும்,கண் | 17 | பேதை, துன்பம், கொல்லோ, யாதெனின், இடும்பை, வினை, வாழ்க்கை, பேதைமை, காணின், | 10 |
| கடை, தற்று, செயின் | 16 | | |
| நட்பு, வேண்டும், நன்று, இன்னா | 15 | | |
| இன்மை, உடைத்து, வா, எஞ்ஞான்றும் | 14 | | |

# இலங்கையில் தமிழ் நோக்கு நூல்களின் வளர்ச்சிப் போக்குகள் ஓர் உசாவல் நோக்கு



**அகராதியியலாளர்; முனைவர் பேரா. ச.சச்சிதானந்தம்**
**பன்னாட்டு உயர்கல்வி தமிழாய்வு நிறுவனம் பாரீசு, பிரான்சு**

பிரித்தானிய மதகுருவான வண. பீட்டர் பேர்சிவல் யாழ்ப்பாணத்தில் மதப்பணியும், கல்விப் பணியும் ஆற்றியிருந்தார். பின்னர் சென்னைக்கு மாற்றம்பெற்றுச் சென்றார். இவர் மொத்தமாக 1870 தமிழ்ப் பழமொழிகளைத் தொகுத்து, ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து திருட்டாந்த சங்கிரகம் என 1843இலும், ஆங்கிலோ – தமிழ் அகராதியை 1867 இலும் வெளியிட்டார்.

### – வின்ஸ்லோ அகராதியில் வேறுபட்ட வளர்ச்சிப்போக்கு

யாழ்ப்பாணத்தில் அமெரிக்க மிஷனரிமாரின் அகராதிப் பணியில் ஒப்புயர்வு பெற்று விளங்குவதும், தமிழ் அகராதியியலின் போக்கை மாற்ற வழிவிட்ட அகராதி வின்ஸ்லோ பதிப்பித்த தமிழ் அகராதி ஆகும். ஆவர் தனது முன்னுரையில் கூறியதாவது...அகராதிகளில் சொற்பிறப்பு ஆராயப்படவில்லை. பதங்கள் சமஸ்கிருதமா, தமிழா, வேர்ச் சொற்களா, மரபு மூலத்திலிருந்து தோன்றியனவா என்று ஆராயப்படவில்லை. சதுரகராதியைப் போலவே வினைகள் தொழிற்பெயர் வடிவத்திலேயே விளக்கப்பட்டுள்ளன. இந்த முறை இலகுவானதெனினும் தவறான கருத்தைக் கூறுவதற்கும் வழிவகுக்கும். ஏனெனில் தொழிற்பெயர் சிலசமயங்களின் வினையின் ஏனைய வடிவங்களுக்கு முரணான கருத்தைக் கொண்டதாக விளங்கும். ஏனைய பதங்களைப் போல முதலில் வினைச்சொல்லின் வேரினைக் கண்டு அதனை முதலில் வைத்தால், ஏனைய வினைவடிவங்கள் அதனைத் தொடர்ந்து விளக்கம் பெறும். வினைகளைப் பொறுத்தளவில் வேராகக் கொள்ளவேண்டியது ஒருமை ஏவல் வினைமுற்றாகும். இந்த முறை முன்னர் அகராதி தொகுத்த ஒருவரினாலும் பின்பற்றப்படவில்லை...

| கையகராதி | (ெ)ராட்லர்அகராதி | வின்ஸ்லோ அகராதி |
|---|---|---|
| ஏமாறுதல் – அலமருதல், தடுமாறுதல் | ஏமாறுகிறது vt.pr றினேன், fut றுவேன், imp று inf ற | ஏமாறு, கிறேன், ஏமாறினேன், வேன்,ஏமாற.. vt. to be disappointed |

| சதுரகராதி | வின்ஸ்லோ அகராதி |
|---|---|
| ஐயம் : இரப்போர்கலம், சந்தேகம் | ஐயம் Doubt, hesitation, un certainity indeci-sion, suspense, sceptisim, terms of probability, possibility and anthing and short of certainity are included சந்தேகம் |

அமெரிக்க மிஷனரிமார் கிறித்தவ மதத்தைப் போதிக்கும் நோக்கத்தோடு அகராதித் தொகுப்பை ஆரம்பித்த போதும், அகராதிக்கலையை மேற்கத்திய சிந்தனைப் பயிற்சிக்கேற்றவாறே வளர்த்தனர். இதனால் தமிழ் வளர்ச்சியுற்றது எனப் பேராயர் கலாநிதி ஜெபநேசன் எழுதிய இலங்கையில் தமிழ் வளர்ச்சியும் அமெரிக்கன் மிஷனும் எனும் நூலில் விவரிக்கப்பட்டிருக்கிறது.









– மாலை அகராதி Botanical Dictionary : 1844

ஓர் தாவரவியல் அகராதி. இதனைத் தொகுத்தவர் சைமன் காசிச்செட்டி. இவர் ஆங்கிலம் – தமிழ் அகராதி, சமற்கிருதம் – தமிழ் அகராதிகளையும் தொகுத்துச் சென்றதாக Gregory James, A History of Tamil Dictionary இல் குறிப்பிட்டுள்ளார்.

கதிரவேற்பிள்ளைகள் அகராதிகள் ஒரு மொழி அகராதிகள் : தமிழ் – தமிழ்

– சதாவதானி நா.கதிரவேற்பிள்ளை (புலோலி): தமிழ்ப் பேரகராதி – தமிழ் மொழி அகராதி 1899

– நீதிபதி வைமன் கு. கதிரவேற்பிள்ளை (வல்வெட்டி) : தமிழ்ச் சொல்லகராதி - 1906

– தமிழ்ப் பேரகராதிதமிழ் மொழி அகராதி

இவ்வகராதியில் உள்ள சூசிபத்திரம் பகுதியில் சொல் தெரிவு, இலக்கணக் குறியீடுகள் பற்றிய விளக்கம் உள்ளது. தமிழ்ப் பேரகராதியில் இலக்கணக் குறிப்பான்களுக்கு எழுத்தால் சுட்டாது குறியீடுகள் கொடுக்கப்பட்டமையானது மற்ற அகராதிகளிலிருந்து வேறுபட்ட, ஓர் புதுவித வளர்ச்சிப் போக்கைக் காட்டியது. 1901,1911 ஆண்டுகளில் மீள்பதிப்புச் செய்யப்பட்டது. பின்னர் காஞ்சி நாகலிங்க முதலியாரால் திருத்தியமைக்கப்பட்டு, தமிழ் மொழி அகராதி எனப் பெயர் மாற்றம் கண்டது. இது முடிசூட்டு விழா அகராதி - The Coronation of Tamil Dictionary எனவும் அழைக்கப்படுவது உண்டு.

*குறிப்பு : இராமசாமி நாயுடுவால் யாழ்ப்பாண அகராதியையும், வேதகிரி முதலியாரின் அனுபந்த அகராதியையும் சேர்த்து கலப்பகராதி, தமிழ்ப் பேரகராதி எனும் இன்னோர் அகராதியும் 1893 இல் வெளியிடப்பட்டது.*

– தமிழ்ச் சொல்லகராதி

1906 காலப் பகுதியில் வெளிவந்த தமிழ் அகராதிகள் போலன்றி, சொற்கள் தெரிவு இன்றி தொகுக்கப்பட்டது தமிழ்ச் சொல்லகராதி, வைமன் கு. கதிரவேற்பிள்ளை சுன்னாகம் அ. குமாரசாமிப் பிள்ளை, உடுப்பிட்டி சி. ஆறுமுகம் பிள்ளை, ஊரெழு சரவணமுத்துப் புலவர், நீர்வேலி சிவப்பிரகாச பண்டிதர் ஆகியோர் துணையுடன் தொகுப்பில் ஈடுபட்டிருந்தார். காலம் கைகொடுக்காமல் தொகுப்பு நிறைவுறாமலேயே காலமாகி விட்டார். இவர் தம் மகனார் பாலசிங்கம் மதுரைத்தமிழ்ச் சங்கத்தைக் கேட்டுக் கொண்டதற்கு இணங்க, சுப்பிரமணியக் கவிராயரைப் பதிப்பாசிரியராகக் கொண்டு வெளியிடப்பட்டது. இதனால் இது சங்க அகராதி எனவும், தமிழ்ச்சங்க அகராதி எனவும் அழைக்கப்படுகின்றது.

63,900 சொற்களை அடக்கிய, மூன்று தொகுதிகளை உடைய இவ்வகராதியானது, முதலாவது தொகுதியில் 17,600 சொற்களையும், இரண்டாவது தொகுதியில் 18,100 சொற்களையும், மூன்றாவது தொகுதியில் 28.200 சொற் களையும் கொண்டு 1800 பக்கங்களில் வெளி வந்தது.

சொற்களின் வளர்ச்சிப்போக்கு எண்ணிக்கை

| சதுரகராதி | கையகராதி | தமிழ்மொழி அகராதி | தமிழ்ச் சொல் அகராதி |
|---|---|---|---|
| 1732 | 1842 | 1899 | 1906 |
| > 1463 சொற்கள் | 58,500 சொற்கள் | 58,500 சொற்கள் | 63,900 சொற்கள் |
| சதுரகராதி | கையகராதி | தமிழ்மொழி அகராதி | தமிழ்ச் சொல் அகராதி |

*குறிப்பு : நா. கதிரவேற் பிள்ளையின் தமிழ்ப் பேரகராதி, கு. கதிரவேற்பிள்ளையின் தமிழ்ச்சொல்லகராதி ஆகிய அகராதிகள் பற்றி தமிழ் அகராதியியல் வளர்ச்சி வரலாறு என்ற நூல் குழப்பம்தரும் வகையில் குறிப்புகள் கொண்டிருந்தது. இவ்வாறே வளரும் தமிழ் எனும் நூல் நா.கதிரவேற்பிள்ளையின் தமிழ்மொழி அகராதி பற்றிய குறிப்பு எதுவும் இல்லை என, கலாநிதி (முனைவர்) மனோன்மணி சண்முகதாஸ், இலங்கைத் தமிழியல் சில பதிவுகள் ( பக்கங்கள் 98 – 101) எனும் நூலில் குறிப்பிட்டுள்ளார்.*

– ஆ.முத்துத் தம்பிப்பிள்ளை English-English-Tamil

ஆ.முத்துத் தம்பிப்பிள்ளை அவர்கள் English - English - Tamil ஆங்கிலம் – ஆங்கிலம் – தமிழ் அகராதியைத் தொகுத்து, வெளியிட்டார். சென்னையில் வாழ்ந்த காலப் பகுதியில் இவ்வகராதியைத் தொகுக்கும் பணியைத் துவங்கி, யாழ்ப்பாணத்தில் தனது அச்சகமான நாவலர் அச்சகத்தில் 1907(8) ஆம் ஆண்டு அச்சிட்டார். இதுவே தமிழின் முதன் தொகுக்கப்பட்ட ஆங்கிலம் – ஆங்கிலம் – தமிழ் அகராதி என்பது வரலாற்றுப் பதிவு : *தமிழ்நாடும் ஈழத்துச் சான்றோரும் க.செபரத்தினம். (2005)*

– சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதி Tamil Lexicon

1911ஆம் ஆண்டு, ஜே.எஸ். சாண்ட்லர் J.S.Chandler அடிகளை முதன்மைப் பதிப்பாசிரியராகக் கொண்டு, சென்னைப் பல்கலைக் கழக அகராதித் திட்டம் தொடங்கப்பட்டது. இதன் அகராதி அமைப்புக் குழுவில் இலங்கை அறிஞர்களும் இருக்க வேண்டும் என்று விதிக்கப்பட்டிருந்தது. மதுரை அமெரிக்கன் மிஷனரியில் பணியாற்றிய வண. சாண்ட்லர் இப்பேரகராதித் தொகுப்பில் பங்கெடுப்பதற்கு, யாழ்ப்பாண அமெரிக்கன் அறிஞர்களைத் தொடர்பு கொண்டு, இலங்கைக்கு, குறிப்பாக யாழ்ப்பாணம் சென்றிருந்தார்.

அமெரிக்கன் மிஷனரி அறிஞர்கள், அ. குமாரசுவாமிப் புலவர், ஆ.முத்துத்தம்பிப் பிள்ளை முதலான அறிஞர்களைச் சந்தித்து, அவர்கள் தமது அகராதிகளுக்கெனத் திரட்டிய சொற்களைப் பெற்றார். இச்சொற்கள் தமிழ்ப்பேரகராதியில், யாழ்ப்பாண வழக்கு(J)என இடம்பெற்றன. 1,17,762 பதிவுச் சொற்கள் உள்ள இந்தத் தமிழ் – ஆங்கிலப் பேரகராதியில் 470 வினைச்சொற்கள் உட்பட 2,000க்கும் மேற்பட்ட யாழ்ப்பாண வழக்குச்சொற்கள் (J) எனக் குறிக்கப் பெற்றுள்ளன. இப்பேரகராதி ஆக்கக்குழுவில் இடம்பெற்ற இலங்கைத் தமிழறிஞர்கள்:

- Rev. Francis Kingsbury - Additional Editor
- A. Muttambi Pillai :- New words
- S.R. Muthukumaru Mudaliar - Rev. J.T. Appa Pillai
- P. Arunachalam Pillai - T. Kailasam Pillai
- Kartikkeya Aiyar - A. Kumarasami Pillai
- V.J. Thambi Pillai

– இலக்கியச் சொல்லகராதி

இலக்கியச் சொல்லகராதி சுன்னாகம் அ. குமாரசுவாமிப் பிள்ளையால் 1914இல் தொகுக்கப்பட்டது. இவ்வகராதியில் இலக்கியச்சொற்கள் இடம்பெற்றிருப்பதால், இது இலக்கிய அகராதி என அழைக்கப்படுகின்றது. இவர் சூடாமணி நிகண்டின் பன்னிருதொகுதிகளில் முதல் ஐந்து தொகுதிகளுக்கும் உரை எழுதியவர்.

– ந.சி. கந்தையா அகராதிகள்

ஆசிரியர் ந. சி. கந்தையா கந்தரோடையைச் சேர்ந்தவர். இவர் சென்னையில் வாழ்ந்த காலத்தில் பல அகராதிகளை உருவாக்கியிருந்தார்.1. செந்தமிழ் அகராதி - 1950, 2. தமிழ் இலக்கிய அகராதி - 1952. 3. திருக்குறள் அகராதி - 1961. 4. தமிழ்ப் புலவர் அகராதி -1960 5. காலக் குறிப்பு அகராதி - 1960. இவற்றில் சிலவற்றை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் வெளியிட்டிருந்தது.

– பெருஞ்சொல்லகராதி

தமிழ்ப்பல்கலைக்கழகத் பெருஞ்சொல்லகராதித் திட்டம் 1983 இல் தொடங்கப்பட்ட பெருஞ்சொல்லகராதியில் இலங்கைச் சொற்கள் இலங்.வழ. எனச் சொற்சுருக்கத்தில் இடம்பெற்றுள்ளது என்பது சுட்டிக்காட்டத் தக்கது.

– Varthar Student's Dictionary வரதர் மாணவர் அகராதி

கொக்குவில்கிழான் கா.வை இரத்தினசிங்கம் என்பவர் தொகுத்து, வரதர் வெளியீடாக வந்தது Varthar Student's Dictionary English - Tamil வரதர் மாணவர் அகராதி : ஆங்கிலம் - தமிழ். நூலின் உள் முதற் பக்கத்திலேயே அடங்கியிருந்த சொற்களின் எண்ணிக்கையைப் பார்வைக்குத் தெரியும்படி அமைக்கப்பட்ட சிறப்பான அகராதி. 18,400 சொற்கள், 4100 மரபுத்தொடர்கள் கொண்ட இவ்வகராதி 1970 இல் முதல் பதிப்பாகவும், 1990 இலும் வெளி வந்தது.

– தமிழிலக்கிய அறபுச்சொல் அகராதி டாக்டர் உவைசு




தமிழில் இலக்கிய வளம் பல்வேறு சமயங்களிலும் கிளை விட்டுள்ளது. இசுலாமியத் தமிழ் இலக்கியத்தில் இடம் பெற்றுள்ள திசைச் சொற்களைப் புரிந்து கொள்ள முடியாத ஒரே காரணத்தினால்தான் இசுலாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ் இலக்கியங்கள் பிறமதத் தமிழர்கள் மத்தியில் பெரு வழக்கைப் பெறவில்லை. திசைச் சொற்களான அறபு, பார்சி மொழிச் சொற்களை அறிந்து கொள்வதற்காக, மதுரை காமராசர் பல்கலைக்கழகத் தமிழ் இசுலாமியத்துறைப் பேராசிரியரான இலங்கையர் டாக்டர் ம. மு. உவைசு அச்சொற்களைத் தொகுக்க பல்கலைக்கழகம் 1983 ஆம் ஆண்டு வெளியிட்டது.

– க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி

க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி 1992ஆம் ஆண்டில் வெளிவந்தது, மூன்றாவது திருத்திய பதிப்பு 2020 இல் வெளி வந்திருக்கிறது. லிஃப்கோ அகராதிகள் இந்தியாவில் மட்டு மல்லாமல் இலங்கையிலும் பயன்படுத்தப்பட்டு வந்தன, காலப் போக்கில்... க்ரியா அகராதியும் தற்காலத் தமிழ்ச் சொற்கள் அகராதியியல் கொள்கைகளைக் கொண்டு சிறப்பாக வந்தது. அதன்சிறப்புக்களை எடுத்துக் கூறுமிடத்து, அந்த அகராதியில்தான் இலங்கைத் தமிழ்ச் சொற்கள்கூடிய எண்ணிக்கையில் இடம் பெற்றிருப்பது குரிப்பிடத்தக்கது. ஏனெனில் இலங்கையர்கள் இலங்கையிலும் புலம்பெயர் நாடுகள் வாழ் தமிழர்கள் அதிக தொகையாக வாங்குவார்கள். அதனால் அவ்வகராதி பெருந் தொகையாக விற்பனையாகி வருவதை க்ரியாவினர் அறிவர்.

ஆயினும் அகராதியில் இடம் பெற்றதாகக் கூறப்படும் சொற்கள் இலங்கையில் நடைமுறையில் பயன்படுத்தப்படும் பொருளை, விளக்கங்களை 100 விழுக்காடு பொருத்தமான தாகத் தரவில்லை என விரிவான முறையில் பேராசிரியர் சு.சுசீந்திரராஜா அவர்கள் எழுதிய, இலங்கை இந்திய தமிழ் வழக்குகளில் சொற்களின் பயன்பாடு எனும் நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது. எடுத்துக்காட்டாக Mad எனும் சொல், பிரித்தானிய ஆங்கிலத்திலும், அமெரிக்கன் ஆங்கிலத்திலும் முறையே crazy, Angry என வேறுபட்ட பொருள்களைச் சுட்டுவது போலவே தமிழகத் தமிழிலும், ஈழத் தமிழிலும் வேறுபட்ட பொருள்களைச் சுட்டுகிறது.

| 1992 | 2008 | 2020 |
|---|---|---|
| சொற்களின் எண்ணிக்கை 15875 | சொற்களின் எண்ணிக்கை 21000 | சொற்களின் எண்ணிக்கை 23800 |
| அவற்றில் இலங்கைச் சொற்கள் 436 | அவற்றில் இலங்கைச் சொற்கள் 1700 | அவற்றில் இலங்கைச் சொற்கள் 2632 |

– ஈழத்துத் தமிழ் சிறப்புச்சொற்கள் கலாநிதி ர. சுபதினி

இலங்கையில் தமிழர், இஸ்லாமியர் வாழும் வடக்குப் பகுதியான யாழ்ப்பாணம், கிழக்குப் பகுதியான மட்டக்களப்பு ஆகிய இடங்களில் வழங்கப்படும் தமிழ்ச் சொற்களைத் திரட்டி,410 பக்கங்கள் கொண்ட ஈழத்துத் தமிழ் சிறப்புச் சொற்கள் எனும் அகராதியை 2005 இல், யாழ்ப்பாணப் பல்கலைக்கழகத்து மொழியியல் ஆங்கிலத்துறைப் பேராசிரியர் கலாநிதி ர.சுபதினி ரமேஷ் தொகுத்து வெளியிட்டார்.

– இலங்கை அரசகரும திணைக்கள தமிழ் பிற மொழிகள் அகராதிகள்

இலங்கையில், அரசகரும மொழிகள் (திணைக்களம்) துறை தமிழ்க் கலைச்சொல் அகரமுதலிகளை, பொருளாதாரக் கலைச்சொல் அகரமுதலி, மொழியியற் கலைச்சொல் அகரமுதலி, தொடர்பாடற் கலைச்சொல் அகரமுதலி,




நுண்கலை கலைச்சொல் அகரமுதலி என்பவற்றை நூல் வடிவிலும், குறுந்தகடு அமைப்பிலும் 2006 இல் வெளியீடு செய்துள்ளது.

அரச நூல் நிறுவனங்களும், தனியார் பதிப்பக நிறுவனங்கள் தமிழ் - சிங்களம், சிங்களம் - தமிழ் அகராதிகள், வட்டார வழக்கு அகராதிகள், வழக்குச்சொல் அகராதி, மட்டக்களப்புச் சொல்நூல், மட்டக்களப்புச் சொல்லகராதியும் பழமொழியகரவரிசையும், மட்டக்களப்புச் சொல்வெட்டு, மட்டக்களப்புப் பிரதேச வழக்குச்சொற்கள்அகராதி, அக்கரைப்பற்று முஸ்லீம்களின் வழக்காற்றுச்சொல், மொழி கற்போர்களின் பயன்பாடுகளுக்காக விற்பனைக்கு விட்டிருக்கின்றன. குறிப்பாக திரு. நடராஜா சிரி ரஞ்சன் என்கிற பட்டதாரியான தமிழார்வலர் 2019ஆம் ஆண்டில் யாழ்ப்பாண அகராதி (547 பக்கங்கள்), யாழ்ப்பாண வழக்குச்சொல்அகராதி: தொகுதி - 1 (239பக்கங்கள்) உருவாக்கியிருந்தார். இவர் இவ்வகராதிகளுக்காக 2021 இல் இலங்கை அரசு சாகித்திய அகாதமி விருது வழங்கி பெருமைப்படுத்தப்பட்டிருந்தார்.







தமிழ் - சிங்கள, சிங்கள - தமிழ் மொழி அகராதிகள்

இலங்கைக்கு மட்டுமே உரிய அகராதித் தொகுப்பு தமிழ், சிங்களம் ஆகிய இருமொழிகளின் உறவு! அரச நூல் நிறுவனங்களும், தனியார் பதிப்பக நிறுவனங்கள் தமிழ் – சிங்களம், சிங்களம் – தமிழ், ஆங்கிலம் – சிங்களம் – தமிழ் அகராதிகள் வெளியீட்டில் ஈடுபட்டுவருகின்றன. இவ்விருவழி இருமொழி அகராதிகளின் தேவையும் பயன்பாடும் நீண்டகாலமாகவே நீடித்துவருகின்றன. அதனால் இவ்வகராதிகள் தொகுக்கப்பட்டே வருகின்றன. இவ்வாறான தேவையை மையப்படுத்தி வெளிவந்த அகராதிகள் பல. அவற்றில் சில பின்வருமாறு.

### சிங்கள - தமிழ் அகராதி:

1993ஆம் ஆண்டு, அரசமொழிகள் திணைக்களம் சிங்கள – தமிழ் அகராதியை வெளியிட்டுள்ளது.

### சிங்கள - தமிழ் ஆங்கில சுருக்க அகராதி:

2013ஆம் ஆண்டு, சிங்கள அகராதித் திணைக்களம் சிங்கள – தமிழ் – ஆங்கில அகராதியை வெளியிட்டுள்ளது

### தமிழ் - சிங்கள அகராதி:

கே.என்.டி.பீரிஸ் முதன்மையாசிரியராகவும் எஸ். ஏ. விஜே சூரியா, எஸ். வேலாயுத பிள்ளை, எம். எச். எம். யாக்கூத், கே.பீ.பீரிஸ் ஆகியோரை துணையாசிரியர்களாகக் கொண்டு அபிவிருத்திக் கழகம்,22500 சொற்களைக்கொண்டு தமிழ் – சிங்கள அகராதி 1994 வெளியிட்டுள்ளது.

### தமிழ் - சிங்களப் பேரகராதி :

பேராசிரியர் டபிள்யூ எஸ். கருணாதிலகா முழுமுயற்சி எடுத்து, எஸ். ஜே. யோகராஜாவின் தமிழ் உதவியோடு கொடெகே பதிப்பகம் 2002இல் வெளியிட்ட பேரகராதியில் 80,000 சொற்கள் அமைந்திருந்தன என்பது குறிப்பிடத்தக்கது.

### தமிழ் - சிங்கள அகராதி சிற்றகராதி :

பேராசிரியர் டபிள்யூ. எஸ். கருணாதிலகா தொகுப்பாசிரியர் கொடெகே பதிப்பகம் 2006இல் வெளியிட்ட சிற்றகராதியில் 35.000 சொற்கள் அமைந்திருந்தன.

3. கலைக்களஞ்சியம் - Encyclopedia

அபிதான கோசம் ஆ.முத்துத்தம்பிப்பிள்ளை

கலை, அறிவியல், வைத்தியம், சோதிடம், வானியல் முதலிய பல்வேறு துறைகளையும் சார்ந்த சொற்களை அகரவரிசையிற் தொகுத்தெடுத்து அவற்றிற்கான பொருள் விளக்கத்தை விபரமாகத் தரும் நூல் கலைக்களஞ்சியம் Encyclopedia ஆகும். இவ்வகையில் தமிழ்மொழியில் ஆக்கப்பட்ட முதற் களஞ்சியம் என்ற பெருமையை ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை அவர்களால் 1902 இல் உருவாக்கப்பட்ட அபிதான கோசம் பெற்றுக் கொள்கின்றது.

4. சொற்பிறப்பு ஒப்பியல் தமிழ் அகராதி -An Etymological and comparative Lexicon of the Tamil Language தமிழ்ச் சொற்பிறப்பு ஆராய்ச்சி எனும் நூல் நல்லூர் சுவாமி ஞானப்பிரகாசர் என்பவரால் 1932இல் பல மொழிகளை ஆராய்ந்து, அவற்றுடன் தாய்த்தமிழை ஒப்பீடு செய்து படைக்கப்பட்டது. சொற்பிறப்பு. இச்சிற்றகராதியானது தமிழ்ச்சொற்பிறப்பகராதி என்ற பேரகராதிக்கு முகவுரை போன்றது.

சொற்பிறப்பு மற்றும் ஒப்பியல் துறையில் வெளிவந்த முதல் தமிழ் அகராதி என்ற வரலாற்றுப் பெருமை இதற்கு உண்டு; ஒரு தமிழ்ச்சொல் அதன் வேரிலிருந்து தோன்றி, வளர்ந்த வழியை இவ்வகராதி காட்டுகின்றது.

| நோக்குநூல்கள் | சொற்பிறப் பாரய்ச்சி | அறிவுக்களஞ் சியம் |
|---|---|---|
| இந்தியா | சொற்பிறப்பு தமிழ் அகராதி ஞா. தேவநேயன் | அபிதான சிந்தாமணி சிங்காரவேலு முதலியார் 1904 |
| இலங்கை | சொற்பிறப்பு ஒப்பியல் அகராதி அகராதி gnana prakasar 1932-47 | அபிதான கோசம் ஆ.முத்துத்தம்பிப் பிள்ளை 1902 |

5.சொற்பட்டியல் - Glossary - Samuel Fisk Green

யாழ்ப்பாணத்தில் வாழ்ந்த அமெரிக்க மருத்துவர் சாமுஏல் ஃபிஸக் கிறீன் தமிழில் பல அறிவியல், மருத்துவ அகராதிகளை உருவாக்கும் முயற்சிகளை மேற்கொண்டார். இவர் முதலில் உருவாக்கிய மருத்துவ அகராதியு - An English - Tamil Dictionary of Medical synonyms 1855 இல் வெளியானது. அதைத் தொடர்ந்து உருவாக்கிய மருத்துவச் சொற்பட்டியல் பின்வருமாறு.

a). The Mother and Child - தாயும் சேயும் : 1872

b). The Ear - காது : 1877

c). The Eye - கண் : 1877

d). The Foot - கால் - பாதம் : 1877

e). The Hand - கை : 18770

f). The Mouth - வாய் : 1877

g). The Skin - தோல் : 1877

h). The Body - உடல் : 1880

i). The Mother and Child - தாயும் சேயும் : 1872

j). Human Anatomy - மனுஷ அங்காதிபாதம்

k). Human Physiology - மனுஷ சுகரணம்

l). Chemistry - மனுஷ கெமிஸ்தம்

m). Art of Surgery - இரண வைத்தியம்

பிரெஞ்சு தமிழ் அகரமுதலியை 1983இல் தொகுத்த முதல் தமிழனாகிய நான், இவ்வகராதியைத் தொகுத்தபோது, பிரெஞ்சுச் சொற்களுக்கான தமிழ்ப்பொருள் (இந்திய) தமிழகத் தமிழிலும், ஈழத் தமிழிலும் வேறுபடுவதாக இருக்குமிடத்து, அப்பிரெஞ்சுச் சொல்லுக்கான தனித்தமிழ்ச் சொல்லினையும், இருநாட்டுத் தமிழ்ச் சொற்களையும் கொடுத்திருந்தேன். இவ்வாறான இருதமிழ் வழக்குச் சொற்களையும் பதிவு செய்யும் உத்தி இந்தியாவிலோ அல்லது இலங்கையிலோ வெளியான எந்த அகராதியிலும் கையாளப்படவில்லை. பிரெஞ்சு - இலங்கைத் தமிழ் எனும் அகராதியைத் தொகுக்க பிரெஞ்சுப் பதிப்பகமான L'Harmattan 1997 இல் வெளியிட்டது.

நான் பிறந்தமண் இலங்கையாக இருந்திருந்தாலும், என்னை இவ்வாறான அகராதியியற் கல்வி நிலைக்கு தக்கோனாக்கி, வளப்படுத்திய, வசந்தப்படுத்திய மண்கள் பிரான்சும், இந்தியாவும் என்பது நிலையான உண்மை. தமிழகத்தில் நோக்குநூல்கள் உருவாகி வளருங்கால், அச்செய்தியும், அந்நூல்களும் இலங்கையில் பெரும்பாலும் சூட்டோடு சூடாகத் தெரிந்துவிடும் நிலை உள்ளது. ஆனால் இலங்கையில் உருவாகும் அவ்வாறான நூல்களில் அகராதிகள்கூட பெரிதளவில் இந்தியாவில் தெரிய வருவது மிகக் குறைவாகவே உள்ளது, இலங்கையில் புழக்கத்தில் உள்ள, அகவணக்கம், இணக்கசபை, ஈகைச்சுடர், இனமேலாதிக்கம், அவசரகாலச் சட்டம் முதலான கணக்கற்ற பல தமிழ்ச்சொற்கள் அம்மண்ணுக்கும் புலம்பெயர்நாடுகளில் வாழும் இலங்கையர்களுக்கே மட்டும் விளங்கக் கூடியதாக உலவுகின்றன.

இவ்வாறான அகராதியியல் சார்ந்த நெருக்கமான உறவுகள் ஒடும்புளியம்பழமும் போல் தொடர்பு அறாமலும் அறுந்தும் இருக்கிற நடைமுறை நிலவிக்கொண்டு வருகிறது. அதனாற்றான் இலங்கையில் நடக்கும் அகராதியியல் நிகழ்வுகள் இலங்கையருக்கே பரவலாகக் காணப்படாத சந்தேக அந்தகத் தகவல்களாகவும், இந்தியருக்குக் கேட்கப்படாத ஆமைவேக ஊமைத் தரவுகளாகவும் ஆகிவிட்டன. இந்த மந்தநிலை உந்துதலுக்கு உள்ளாக்கப்பட்டு, எண்ணம், கருத்து, அழகு முதலான சந்தங்களில் வளர்ச்சிப்போக்கில் வலு ஏற்படவேண்டும் என்பது ஈந்த உசாவலின் ஆவல் ஆகும்.

இக்கட்டுரையாக்கத்திற்கு உசாத்துணையாகப் பயன் பட்ட நூல்கள் ஆங்காங்கே சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.

# மொழியாக்கம் சில முரண்பாடுகள்

மறையரசன், தமிழறிஞர்

## முன்னுரை

உலகம் பரந்துபட்டிருந்தது; இன்று சுருங்கிவிட்டது. போக்குவரத்து, தொலைத்தொடர்புக் கருவிகள், துணைக்கோள்கள் முதலானவை உலகைச் சுருக்கிவிட்டன. அதன் விளைவு, மொழிகள் யாவும் மாற்றங்களைப் பெறுகின்றன. மொழி ஆக்கங்களையும் பெறுகின்றன. தாய்மொழி வழியே கல்வி பெறுவதே தகையென்று, பகை உணர்வில்லாத பெருந்தகைகள் அண்ணல் காந்தியடிகள், விவேகானந்தர், இரவீந்திரநாத் தாகூர் முதலியோர் இந்த நூற்றாண்டின் தொடக்கத்திலேயே தருக்கிச் சொன்னதைப் பெருக்கிச் சொல்வதே இந்த ஆய்வுக் கட்டுரையின் நோக்கம்.

பெரும் பாவலன் பாரதியும்,

**சென்றிடுவீர் எட்டுத் திக்கும் கலைச்செல்வங்கள்**

**யாவும் கொணர்ந்திங்குச் சேர்ப்பீர்**

என்றும்,

**பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்**

**தமிழ்மொழியிற் பெயர்த்தல் வேண்டும்**

**இறவாத புகழுடைய புது நூல்கள்**

**தமிழ்மொழியில் இயற்றல் வேண்டும்**

என்றும் (பாரதியார் கவிதைகள் 1993; 172 173) மொழியாக்கத்தின் இன்றியமையாமையினைச் சுட்டிக்காட்டுகின்றார்.

**தொண்டு செய்வோம் தமிழுக்குத்**

**துறைதோறும் துறைதோறும் துடித்தெழுந்தே**

என்று பாவேந்தரும் மொழியாக்கத்தை வலியுறுத்துகின்றார்.

மொழிபெயர்ப்பின் இன்றியமையாமையினையும் சிறப்பினையும் கருத்தில் கொண்டு இந்திய நடுவண் அரசு சென்ற ஆண்டு முதல் மொழிபெயர்ப்பாளர்களுக்குச் சாகித்திய அகாதமி விருது அளித்துப் பெருமைப்படுத்தியுள்ளது.

சான்று; கா. சிறி. சிறி அவர்களுக்குக் காண்டேகர் புதினங்களை மொழிபெயர்த்தமைக்காகச் சாகித்திய அகாதமி விருது வழங்கப் பெற்றது.

## மொழி

கருத்தைப் புலப்படுத்த, மாந்தர் கண்சாடை, முகக் குறிப்பு, சைகை, நடிப்பு, உடல் அசைவு முதலிய செய்கை களையும் ஆ, ஊ, ஏ, ஐ, ஆய், ஓ முதலிய உணர்வொலி (Emotional Sound), ஒப்பொலி (Imitative Sound), குறியொலி (Symbolic Sound), வாய்ச்செய்கையொலி (Gesticulatory Sound), குழவி வளர்ப்பொலி (Nursery Sound), சுட்டொலி (Deictic Sound) முதலிய அறுவகை ஒலியையும் ஆண்டு வந்தனர் என்று மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணர் தன் "முதல் தாய்மொழி" என்னும் நூலில் குறிப்பிடுகின்றார். (தேவநேயப் பாவாணர், முதல் தாய்மொழி; 1991)

அதன்வழி, படிப்படியாக மொழி பிறந்தது வளர்ந்தது. மொழி மாந்தனின் அரிய கண்டுபிடிப்பு. கலை, இலக்கியம், வரலாறு, அறிவியல் போன்றவற்றைத் தரும் ஒரு வடிவமாகும். மொழி கருத்தைச் சுமக்கும் ஊர்தி என்பர். மக்களை மாக்களிடமிருந்து வேறுபடுத்திக் காட்டுவதும் மொழியே.

## மொழியின் வடிவங்கள்

மொழியின் வடிவங்களை ஒலிவடிவம், வரிவடிவம் என இரண்டாக்கலாம். ஒலி வடிவிலிருந்து, எழுத்துக் குறியீடுகளைப் பெற்று வரிவடிவமாக வளர்ந்தது. தமிழில் உள்ள ஒலிவடிவம், வரிவடிவம் விளக்கப் புகின் அது, தனிக் கட்டுரையாக விரியும். இந்திய மொழிகளில் பல, வரிவடிவம் பெறாமலே உள தற்போதுதான் எழுத்து வடிவம் பெற்று வருகின்றன.

சான்று: சௌராட்டிர மொழி சென்ற இரண்டு ஆண்டுகளுக்குள் தான்

எழுத்து வடிவம் பெற்றது.

## மொழியாக்கம்

மொழியாக்கம், மொழிப்படுத்தல், மொழிபெயர்ப்பு என்ற மூன்று சொற்களுக்கும் நுணுக்கமான வேறுபாடு உண்டு.

மொழிப்படுத்தலை (Transliteration) என்றும் மொழி பெயர்ப்பை (Translation) என்றும் ஆங்கிலத்தில் குறிப்பிட முடிகிறது. ஆயின் மொழியாக்கத்திற்கு ஆங்கிலத்தில் சொல் இருப்பதாகத் தெரியவில்லை. மொழிப்படுத்தல் என்பது அப்படியே பிறமொழி ஒலிக்குத் தமிழ் வரிவடிவம் கொடுப்பது. மொழி பெயர்ப்பு என்பது ஒரு மொழியில் உள்ள நூலை அப்படியே பெயர்ப்பது. இதில் மொழிக்கு முகாமை கொடுப்பதில்லை.

சான்று: விவிலியம் நூல் மொழிபெயர்ப்பு வழக்கிலிருந்த வடமொழிச் சொற்கள் அப்படியே பயன்படுத்தப்பட்டுள்ளன. சான்று: கர்த்தர், பிதா, சுதன் பரிசுத்த ஆவி, வானதூதர், புனிதர், பிரமாணம், விசுவாசம்.

மொழிபெயர்ப்பு : பிற சான்றுகள் : கா. சிறீ, சிறீ காண்டேகரின் புதினங்கள் மொழிபெயர்ப்பு. கொங்குவேளிரின் பெருங்கதை, வீரமாமுனிவரின் தேம்பாவணி.

## மொழிஆக்கம்

மொழி ஆக்கம் மொழி பேசும் மக்களின் பண்பாட்டிற்கேற்ப வேற்றுமொழியில் உள்ளவற்றைப் படைப்பது.

சான்று : இராமாயணம் வால்மீகி படைப்பு; கம்பனின் தமிழாக்கம்..

சீதையை இராவணன் குடிசையோடு பெயர்த்து எடுத்துச் செல்லுதல் மற்றும் சுக்கிரீவன் தாரையைத்

தாயாகப் போற்றுதல் தமிழ்ப் பண்பாட்டிற்குக் குறைவராத மொழியாக்கம், கம்பனின் சிறப்பு. பிற, பாரதியின் பாஞ்சாலி சபதம், பேராசிரியர் சுந்தரம் பிள்ளையின் மனோன்மணீயம் (இலிட்டன் பிரபு எழுதிய இரகசியவழி (The Secret Way)யின் தழுவல்) மேலும் மனோன்மணீய நாடகத்தில் வரும் சிவகாமியின் சரிதம் என்னும் கதை, கோல்டு சிமித்து எழுதிய விகார் ஆப் வேக்ஃபீல்டு (Vicar of Wakefield) என்னும் புதினத்தில் வரும் கதை பொதி தனிப்பாடலின் தழுவலாகும். இதுவும் தமிழகப் பின்னணி கொண்டு மொழிபெயர்ப்பு என்று கூற முடியாதவாறு இயல்பாய் ஒழுகி இருக்கிறது.

மனோன்மணீயம் நாடகமும் குறிப்புரையும் பதிப்பாசிரியர் சீனிவாசன் 1070 முன்னுரை :iv)

பாவேந்தரின் புரட்சிக் கவி (பில்கணியம்), கவிமணியின் ஆசியசோதி (Light of Asia by John Banion) மற்றும் உமர்கயாம் பாடல்கள்

சான்று : வீசுந்தென்றல் காற்றுண்டு...

கையில் கம்பன் கவி உண்டு...

### தற்சமம் – தற்பவம்

நீண்டகாலத்திற்கு முன்பே தமிழில் வடமொழிச் சொற்கள் கலந்துவிட்டன என்பது இலக்கண நூல்கள் காட்டும் தற்சமம் தற்பவம் வழி விளங்கும். தற்சமம் ஒலிபெயர்ப்பாக வடமொழிச் சொற்கள் தமிழ் எழுத்துகளில் எந்தத் திரிபும் இல்லாமல் பொதுவாக அமைவன.

சான்று : கமலம், குங்குமம், யாத்திரை, வாகனம்

தற்பவம் : ஜடை சடை, பங்கஜம் பங்கயம் “ஜ” ‘ச’வாகவும்; யாவகவும் திரிவது (தமிழ் இலக்கணம் எட்டாம் வகுப்பு : 19752930).

காலவோட்டத்தில் வட வடமொழித் தாக்கத்தினால் வேட்டிவேஷ்டியாகவும், சீரகம் ஜீரகமாகவும் திரிந்து மணிப்பிரவாள நடை தோன்றியது. களையப்பட்டு நல்ல தமிழில் மொழியாக்கம் செய்ய வழிகளைக் காண்போம்.

### ஆங்கிலேயர் (பலுக்கு) முறை

ஆங்கிலேயர்கள் பலுக்கலுக்கு (உச்சரிப்புக்கு) ஏற்பப் பல சொற்களை மாற்றி உள்ளனர்.

சான்று : ஊர்ப்பெயர்கள் தஞ்சாவூர் – டேஞ்சூர், திருநெல்வேலி – டின்னவேலி, ஒற்றைக்கல்மன்று – ஒட்டக்கமன்ட், தரங்கம்பாடி – ட்ரங்க்பார், எழும்பூர் – எக்மோர், காளிக்கோட்டம்– கல்கட்டா, கொல்லம் – கொய்லான். பெயர்ச்சொற்களைக்கூட மொழிபெயர்த்துள்ளனர்.

மலைக்கோட்டை – ராக்போர்ட்

நீலமலை - புளுமவுண்டன்

பொன்மலை - கோல்டன் ராக்

திங்கள் சந்தை - மண்டே மார்க்கெட் (குமரி மாவட்டம்)

கன்னியாகுமரி - கேப் கோமரின்

என்றும் மொழிபெயர்த்துள்ளனர். அதைப்போல, தமிழில் பாவாணர் நல்ல தமிழில் மொழியாக்கம் செய்ததை ஏற்க மனமில்லாதவர்கள் எதிர்த்தனர்.

சான்று : ஆக்சுபோர்டு பல்கலைக் கழகம் எருது ஆற்றந்துறையிலே தொடங்கப்பட்டதனால் அதற்கு அந்தப்பெயர் ஏற்பட்டது என்பதை ஆய்ந்து எருதந்துறைப் பல்கலைக்கழகம் என்று பெயரிட்டதை ஏற்க மனமில்லாதவர்கள் எதிர்த்தது கண்கூடாகிறது. இதைப்போன்ற மொழியாக்கங்களை ஆங்கிலத்தில் செய்யும்போது ஏற்கின்ற மனம் தமிழில் செய்யும் போதும் ஏற்கின்ற பக்குவம் பெற வேண்டும்.

### மொழிபெயர்ப்பு முறை

நேரிடையாகச் சொல்லுக்குச் சொல் மொழிபெயர்த்தல் தேவையில்லை.

சான்று : தேர்வுக்கு முன்னால் பணம் கட்ட வேண்டும். சொல்லுக்குச் சொல் மொழி பெயர்ப்பித்து TIE THE MONEY INFRONT OF EXAMINATION என்பது பேதைமையும் பகடிக்குரியதுமாகும். ஆனந்தவிகடன் இதழ் ஹெட் லைன் ஹொரன்னப்பா Seshan issue takes a new turn என்பதை, சேஷன் குழந்தை புதிய திருப்பத்தை எடுக்கிறது என்று மொழி பெயர்த்துப் பகடி செய்கிறது. (ஆனந்தவிகடன் கிழமை இதழ் 13.11.94) சில சொற்களுக்கு நேரிடையாக மொழி பெயர்க்காமல் பயன்பாட்டுச் சொற்களைத் தேடிப்படித்து, வழக்கிழந்த வண்டமிழ்ச் சொற்களை வழக்காற்றுப்படுத்துதல் பகுத்தறிவுக்கு ஏற்றதும் சிறப்பானதுமாகும்.

சான்று : SMALL POX என்று சொல்லைச் சிறிய கொப்புளம் என்றோ சிறிய அம்மை என்றோ மொழிபெயர்ப்பது நம் அறியாமையை வெளிச்சம் போட்டுக் காட்டும். SMALL POX என்ற சொல்லுக்குச் சரியான வழக்குச் சொல் பெரிய அம்மை என்பதே. மொழிஞாயிறு பாவாணர் மொழி பெயர்ப்பு முறைகளாக ஐந்தினை விளக்கியுள்ளார்.

1. ஒப்பொலி முறை சான்று: BRACKET பிறைக்கோடு

2. வேர் முறை சான்று: CHROMIUM குருமியம் (குரு நிறம்)

3. முதலெழுத்து முறை சான்று: RADAR = RADIO DETECTING RANGING கதுவிகதிரியத் துப்பறிவும் வீச்சீடும்

D.D.S. = DIAMINO DIPHENYL SULPHONE

இ.இ.ம. இருகாரின் இருமினல்மிஞ்சிகம்

4. சிறப்பு முறை சான்று: VERTEBRA =முதுகி

5. வழக்கமுறை சான்று: SILVER வெள்ளி (BLOOD) குருதி (அரத்தம்)

என்றும் காட்டியுள்ளார்.

(தொகுப்பாசிரியர் அரிமா மகிழ்கோ JIPMER MAGAZINE மடலம் கக: 1972; அறிவியல் தமிழ் 1112 பொதுத்தமிழ் 11)

### மொழியாக்க முரண்பாடுகள்

ஒரே சொல்லுக்குப் பல சொற்களைப் பயன்படுத்துதல்: ஒரே சொல்லுக்குப் பாடநூல்களில் பல சொற்களைப் பயன்படுத்துவதால் மாணவர்களுக்குப் பொருள் மயக்கம் ஏற்படுகின்றது. இரண்டும் வெவ்வேறு பொருள்கொண்ட சொற்களோ என்று கருதும் நிலை ஏற்படுகிறது.

சான்று : CENTRE சென்டர் என்ற ஆங்கிலச் சொல்லுக்கு மையம், நடு, நடு சென்டர், நடுவம் என்று பல சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன.

EPIDERM எபிடர்ம் என்ற சொல்லுக்குப் புறத்தோல், வெளித்தோல், மேல்தோல் என்று பல சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன. EPI என்ற சொல்லுக்குப் புற, வெளி, மேல் என்ற மூன்றுமே சரியான ஆக்கம் என்றாலும் கூட, ஒரே சொல்லைப் பயன்படுத்தல் வேண்டும்.

சான்று : EPIGENOUS (CSTEM) தரைமேல் (தண்டுகள்)

ENDOGENOUS அகத்தோன்றி எனவும் பாடநூல்களில் உள, EPI, ENDO, GENOUS என்றும் வெவ்வேறு சீரற்ற சொற்கள் பயன்படுத்தப்பட்டுள (உயிரியல் மேல்நிலை : 1993; 422)

ஏழாம் நிலை அறிவியல் பாடநூலில் Volume என்ற சொல்லுக்குக் கன அளவு என்று முழுமையும் பயன்படுத்தப்பட்டுள்ளது. (அறிவியல் ஏழாம் வகுப்பு 1992:1)

ஆயின் ஒன்பதாம் நிலைப் பாடநூலில் அதே ஆங்கிலச் சொல்லுக்குப் பருமளவு எனப் பயன்படுத்தப்பட்டுள்ளது. (அறிவியல் ஒன்பதாம் வகுப்பு 1990;13 மற்றும் வெற்றி அறிவியல் 3இன் பாகம் வகுப்பு 1)

படித்தவர்கள் கூட இரண்டும் வெவ்வேறு சொற்களோ என்று ஐயுற்று ஒரு முறைக்கு மறுமுறை பார்க்கவேண்டிய நிலை ஏற்படுகிறது. அலகீட்டில் கன அடி, கன மீட்டர் என்றே பயன்படுத்தப்படுவதால் 'கன அளவு' என்ற சொல்லே, எல்லா நிலை அறிவியல் பாடநூல்களிலும் பயன்படுத்தப்படல் வேண்டும்.

### சொல் மயக்கம்

திருமரைக்காடு என்ற சொல் மான்கள் அதிகம் இருந்த காட்டைக் குறித்தது "'ரகர" "றகர'" மயக்கால் திருமறைக்காடு என்றாகி வடமொழியில் வேதாரண்யம் என்று திரிந்து வழக்கில் உள்ளது. அதை மொழிபெயர்ப்பதாக எண்ணிக்கொண்டு தமிழ் உணர்வாளர்கள் திருமறைக்காடு என்று மாற்றப் போராடும் நிலை ஏற்பட்டுள்ளது. அது போலச் சபரிமலையில் உள்ள அமுத மலையும் அதையொட்டி அமைந்துள்ள அமுத ஆறும் முறையே அமுதா மலை, அமுதா ஆறு ஆகும். தற்பொழுது அமுதா மலை, அமுதா நதி என்றாகித் தற்போது அழுதை மலை, அழுதை நதியாகி வழங்கி வருகிறது. அது மட்டுமல்லாமல், 'மலை செங்குத்தாக இருப்பதால் எவ்வளவு வலிமையானவர்களும் ஏறுகின்றபொழுது தொல்லைப்பட்டுக் கண்ணீர் விட்டு அழுதுவிடுவார்கள். அதனால் அம்மலைக்கு அப்பெயர் ஏற்பட்டது என்ற கட்டுக்கதையும் ஏற்பட்டுள்ளது.

### வடமொழி ஆளுமை

வடமொழியின் ஆளுமையால் பலசொற்கள் சிதைந்து சிறப்பிழந்துள்ளன.

| | |
|---|---|
| மயிலாடுதுறை | - மாயூரம் |
| குரங்காடுதுறை | - கபித்தலம் |
| முதுகுன்றம் | - பழமலை விருத்தாசலம் |
| செரித்தல் | - ஜெரிமானம் ஜீரணம் |
| சீரகம் | - ஜீரகம் |
| சுரம் | - ஜுரம் |
| மூச்சு மண்டலம் | - சுவாச மண்டலம் |

பிறமொழியின் ஆளுமை களையப்படவேண்டும். 'அர்' என்ற சொல் சிவப்பு என்ற வண்ணத்தைக் குறிக்கும்.

சான்று: அரக்கு, அரத்தை, அரளி

அர்அரத்தமாகி, சிவந்த குருதியைக் குறித்தது. வடமொழி ஆளுமையால் அரத்தம் 'ரத்த'மாகியது. அதைத் தமிழில் எழுதும்பொழுது தமிழில் முதல் எழுத்தாக 'ரகரம்' வரா நிலையில் 'ரத்தம்' இரத்தமாக எழுதப்பட்டு வருகிறது. அரத்தம் இரத்தமான வரலாறு அரசன் ராஜனாகி இராசனானதும்,

அரையன் ராயனாகி இராயராக இருப்பதும் இந்த வகையிலேயே பிற மொழியின் ஆளுமைகள் முழுமையாகக் களையப்பட்டு, பழைய சொற்களைத் தேடி தனித்தமிழ்த் தந்தை மறைமலையடிகள், மொழிஞாயிறு பாவாணர் வழி மொழியாக்கம் செய்வதன் வாயிலாக இம் முரண்பாடுகளைக் களையலாம்.

### பொருள் பொதிவின்மை

பொருள் பொதிந்த சொல்லாக இல்லாதிருத்தல் : A Manual of Health Worker - Female பெண் நலப்பணியாளர் கை ஏடு மொழிபெயர்ப்பு கூர்ந்தாய்வுக்காக என் பார்வைக்கு வந்தது. அதில் 'சுகாதாரம்' என்ற சொல் பெரும்பான்மையான இடங்களில் பயன்படுத்தப்பட்டிருந்தது. 'சுகம்' என்பதும் 'ஆதாரம்' என்பதும் தமிழ் சொற்களல்ல. ஆயினும் Health, Hygene, Welfare, Sanitation என்னும் நான்கு சொற்களுக்குமே 'சுகாதாரம் என்றே மொழி பெயர்க்கப்பட்டிருந்தது. அது பிழை என்பதையும் Health நலம், Hygene தூய்மை, Welfare நலவாழ்வு, Sanitation துப்புரவு என்று குறிப்பதே சரியென்று விளக்கம் தந்து சென்னை தமிழ் வளர்ச்சி இயக்கத்திற்கு மடல் எழுதியதுடன் முழு நூலையும் கூர்ந்தாய்வு செய்து தந்தேன்

தமிழில் மொழியாக்கம் செய்கின்றபோது, 'தமிழில் சொற்கள் இல்லை; அதனால் அப்படியே ஆங்கிலத்தில் இருந்து மொழிப்படுத்திக் கொண்டு (எழுத்துப் பெயர்ப்புச் செய்து கொண்டு) இயல்கின்ற இடங்களிலெல்லாம் தமிழாக்கிக் கொள்ளலாம்' என்னும் நிலை உள்ளது. இயல்கின்ற என்பது அவர்களுக்குத் தெரிந்த அளவு தாம் கொள்ளமுடியும். அவர்களால் இயலாது எனின் தமிழில் இயலாது என்பது வேடிக்கையே. சில சொற்களைத் தமிழில் மொழியாக்க முடியாது என்று கட்டுக்கதை கூறி ஆங்கில, இலத்தீன் கிரேக்கச் சொற்களை அப்படியே தமிழில் எழுத்துப் பெயர்த்து எழுதுகின்றனர்.

கைபாக்சியா - HYPOXIA
கைபோபைசீஸ் - HYPOPHYSIS
எபிகார்டியம் - EPICARDIUM
எபிடெர்மீசு - EPIDERMIS
எபிதீலியம் - EPITHELIUM
பைலோரசு - PYLORUS
என்றும் பயன்படுத்தப்படுகின்றன.
கலைக்கதிர் அகரமுதலியல்
HYPOXIAL - தாழ் உயிரியம்
HYPOPHYSIS - அடி வளரி தாழ்வளரி
EPICARDIUM - நெஞ்சு மேலுறை (புறவுறை)
EPIDERMIS - புறச்சருமம்
EPITHELIUM - புறத்தோலியம்
PYLORUS - குடரி புறவாயில்

என்றும் குறிக்கப்பட்டுள்ளன. ஆயினும் எபிதீலியம் ஒப்பொலி முறைப்படி, புறத்தோலியம் என்றும், எபீடர்மிசு புறச் சருமம் என்றும் குறிக்கப்பட்டுள்ளவற்றை முறையே எபிடெர்மீசு புறத்தோலியம் என்றும் எபிதீலியம் புறமுடிகம் என்றும் பயன்படுத்தப்படல் வேண்டும்.

(கலைக்கதிர், கலைச்சொல் அகராதி மூன்றாம் தொகுதி.) ARTERIES ஐயும், VEINS ஐயும் ஆர்ட்டரி - வெயின் என்றோ, தமிழாக்குவதாக எண்ணிக்கொண்டு துடிகுழல், வடிகுழல் என்றோ மாற்றாமல் பழந்தமிழ் முறைப்படி அகத்தியர் குணவாகடத்திலும் பிற நூல்களிலும் குறிப்பிட்டுள்ள நாடி நாளம் என்று சொற்களைப் பயன்படுத்தலாம். நாடிபார்த்தல் நாடித் துடிப்பு என்ற சொற்கள் பழக்கத்திலிருந்தும் முறையே 'தமனி, சிரை' என்ற சொற்கள் பாட நூல்களில் பயன்படுத்தப்படுதல் பிழையே. 'ஆர்ட்டரி' என்ற சொல் உயிர்வளி Oxygen கலந்திருப்பதால் காற்றுக் கலந்த குருதி ஓடும் குழல் என்னும் பொருளில் கிரேக்க மொழியில் பயன்படுத்தப்பட்டது. அதை வேர்முறை கண்டு மொழிபெயர்ப்பதாக எண்ணிக் கொண்டு காற்றுக் குழாய் என்று பயன்படுத்துவதும் பிழையே.

துறைசார்ந்த அறிஞரும் மொழி அறிஞரும் இணைந்து ஒருமித்துச் செயல்படவேண்டும். GENERAL ANEAS-THESIA . . . . என்ற சொல்லைப் 'பொதுமயக்கு' என்று மொழியாக்க முடியாது. 'முழுமயக்கு' என்றே மொழியாக்கம் செய்ய வேண்டும். அதைப்போல ACTIVEIMMUNITY PAS-SIVEIMMUNITY, என்பனவற்றிற்குத் 'தீவிரத் தடுப்பாற்றல்', 'மந்தத் தடுப்பாற்றல்' என்று இருப்பதைக் காட்டிலும் 'இயல்புத் தடுப்பாற்றல்', இரவல் தடுப்பாற்றல் என்று இருப்பதே சாலும் என்று மருத்துவர் திருவாட்டி ஞா. இராசராசேசுவரி

கலைச்சொற்கள் ஒரு நூல் மதிப்பீடு என்னும் கட்டுரையில் குறிப்பிட்டிருப்பதும் கருத்தில் கொள்ளத்தக்கது. (மருத்துவக் கலைச்சொற்கள் ஒரு நுண் மதிப்பீடு, மருத்துவர் ஞா. இராசராசேசுவரி உருட்டச்சுப் படிகள்)

தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் தொடக்க காலத்தில் வெளியிட்ட பாடநூல்களில் பத்தாம் நிலை விருப்பப்பாடம் உயிரியல் நூலில்

COELENTERATA - குழி உடலி
PLATYHELMANTHES - தட்டைப் புழுவினம்
NEMATHELMINTHES - உருளைப் புழுவினம்
MOLLUSCA - மெல்லுடலி
ANNELIDA - வளைத்தசைப் புழுவினம்
ARTHROPODA - கணுக்காலிகள்
ECHINODERMATA - முன்தொளி
(உயிரியல் விருப்பப் பாடம் 1972 : 92 - 97 )

என்று இருந்தது. இவை துறை அறிஞர்களின் மொழியாக்க அறிவுக் கூர்மைக்குச் சான்றுகளாகும். ஆயின் இந்நிலை பின்பு மாற்றப்பட்டுத் தற்போது ஒன்பதாம் நிலை அறிவியல் பாடநூலில் மொழிப்படுத்தலாக TRANSLITERATION ஆக அப்படியே பயன்படுத்தப்பட்டுள்ளது. அதற்குப் பகரமாக மீண்டும் பழைய சொற்களையே பயன்படுத்தி அடைப்புகளில் ஆங்கில எழுத்துகள் கொண்டு சொற்களைப் பயன்படுத்துதல் மாணவர்க்கும், மொழிக்கும் பயன்பாடுடையதாகும்.

### புதுச் சொல்லாக்கம்

புதிய ஒரு சொல்லுக்குப் பல்வேறு அறிஞர்கள் பல்வேறு சொற்களை மொழியாக்கமாகத் தருதல் இயல்பு.

சான்று : AIDS - ACQUIRED IMMUNO DEFICIENCY SYNDROME

என்ற உயிர்கொல்லி நோய்க்கு வலி இழப்பு, ஏப்பு ஏம இழப்பு (ஔவை நடராசன்) தடுப்பாற்றல் குறை நோய் எதிர்ப்பாற்றல் இழப்பு நோய், எ.இ.சு. நோய் என்று பல சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன.

வலிவு வலி இழப்பு வலிமை இழப்பு என்பதின் சுருக்கமாகப் பயன்படுத்தப்படுகிறது. அது வலிமை இழப்பைக் குறிக்காமல் வலியின்மையை LOSS OF PAIN என்ற பொருள் மயக்கம் தரும். இழப்பு என்று பயன்படுத்தினால் இடையில் ஏற்பட்ட ACQUIRED என்ற சொல்லின் பொருள் போகிறது. ஏம இழப்பு என்பதும் ஏப்பு என்பதும் தெளிவில்லாமல் உள்ளன. தடுப்பாற்றல் குறைநோய் என்பதும் ACQUIRED என்ற சொல்லின் பொருள் இல்லாத குறையாக உள்ளது. எதிர்ப்பாற்றல் இழப்பு கவர்தல் நோய் என்பதில் எல்லாச் சொற்களுக்குமே முழுமையான நிலையில் பொருள் அமைந்துள்ளது.

கவர்தல் சிறிது சிறிதாகச் சார்தல் ACQUIRED . பாவாணரின் முதல் எழுத்து

முறைப்படி எ.இ.சு. நோய் என்று பயன்படுத்துதல் வழி ஒப்பொலி முறையிலும் அதிக வேறுபாடு இல்லாமலும் உள்ளது கருத்தில் கொள்ளத் தக்கது.

### ஆய்வு முடிவுகள்

1. ஆங்கிலத்தில் மொழியாக்கங்களை ஏற்கின்ற மனம் தமிழில் செய்யும்போதும் ஏற்கின்ற பக்குவம் பெற வேண்டும்.

2. வழக்கிழந்த வண்டமிழ்ச் சொற்களைப் பிற மொழிச் சொற்களுக்கேற்ப வழக்காற்றுப்படுத்துதல் வேண்டும்.

3. மொழியாக்கத்திற்குத் தனித்தமிழ்த் தந்தை மறைமலையடிகள், மொழிஞாயிறு பாவாணர் முறைகள் பின்பற்றப்படல் வேண்டும்.

4. ஒரே சொல்லுக்குப் பாடநூல்களில் வெவ்வேறு நிலைகளில் வெவ்வேறு சொற்களை மொழியாக்கமாகப் பயன்படுத்தி மாணவர்களைக் குழப்பும் நிலை விடுத்துக் கலைச்சொல் பட்டியல் அணியப்படுத்தி அனைத்து நிலைகளுக்கும் பாடநூல் எழுதுவோரை ஒரே சொல்லைப் பயன்படுத்தும்படி வலியுறுத்த வேண்டும்.

5. பிறமொழிகளின் ஆளுமையிலிருந்து தமிழை முழுமையாக மீட்டு வேர்ச்சொல் கண்டு பயன்படுத்தப்படுதல் வேண்டும்.

6. பொருள் பொதிந்த சொற்கள் இருந்தும்கூட அவற்றைப் பயன்படுத்தாது பழகிப் போய்விட்டது என்ற காரணத்திற்காக அச்சொற்களையே பயன்படுத்துதல் மாற்றப்பட வேண்டும்.

7. துறை சார்ந்த அறிஞரும், மொழி அறிஞரும் இணைந்து ஒருமித்துச் செயல்பட்டு, கலைச் சொற்களை அணியப்படுத்துதல் வேண்டும்.

8. புதிய பிறமொழிச் சொற்களுக்கு மொழியாக்கம் என்னும் பெயரில் வெவ்வேறு சொற்கள் வரினும் குழு ஆய்வின் வழி தகையான சொற்களை அறிமுகப் படுத்துதல் வேண்டும்.

9. முன்னரே மொழியாக்கம் பெற்ற சொல்லுக்குப் புதிய சொல்வரின் மீளாய்வு செய்தல் வேண்டும்,

10. மொழியாக்கம் என்னும் பெயரில் தமிழில் பிறமொழிச் சொற்களையும், எழுத்துகளையும் கலந்து, மொழிப்படுத்தலாக இல்லாமல், மெய்யான மொழியாக்கமாக இருக்க வேண்டும். மேற்கண்ட கருத்துகளை முன்வைப்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

### துணை நூற்பட்டியல்


1 பாரதியார் கவிதைகள் மணிவாசகர் பதிப்பகம், 55 இலிங்கித் தெரு சென்னை. 1993 செம்பதிப்பு

2. பாரதிதாசன் தமிழியக்கம், செந்தமிழ் நிலையம் இராமச்சந்திரப்புரம், திருச்சி ஜில்லா ஏழாம் பதிப்பு 1972 : 7.

3. தேவநேயப்பாவாணர் ஞா. முதல் தாய்மொழி அல்லது தமிழாக்க விளக்கம், திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், 154 டி. டி. கே. சாலை, சென்னை 18, 1991 மறு பதிப்பு,

4. சீனிவாசன் ரா. மனோன்மணீயம், அணியகம், 22 செல்லம்மாள் தெரு, சென்னை 30, 1970 முதற்பதிப்பு.

5. தமிழ்நாட்டுப்பாடநூல் நிறுவனம், தமிழ் இலக்கணம், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், எட்டாம் வகுப்பு, 1975 முதல்பதிப்பு.

6. பாஸ்கி ஆனந்தவிகடன், கிழமை இதழ், தபால் பெட்டி எண் : 1024 தி. நகர், சென்னை 600 017.

7. ARIMAMAGIZHKO K. THE JIPMER MAGAZINE PAVANAR SPECIAL VOLUME XI 1972.

8. தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், உயிரியல் மேல்நிலை முதலாம் ஆண்டு தொகுதி 1, மறுபதிப்பு 1991.

9. தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், அறிவியல் ஏழாம் வகுப்பு, மறு பதிப்பு 1992.

10. தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், அறிவியல் ஒன்பதாம் வகுப்பு, மறுபதிப்பு 1990.

11. மறையரசன் மருத்துவர் கூர்ந்தாய்வுனர், பெண் நலப் பணியாளர் கையேடு.

12. மறையரசன் மருத்துவர் கூர்ந்தாய்வுனர், கலைக்கதிர், கலைச்சொல் அகராதி மூன்றாம் தொகுதி.

13. இராசராசேசுவரி மருத்துவர் ஞா. மருத்துவக் கலைச் சொற்கள், ஒரு நுனி மதிப்பீடு, உருட்டச்சுப் படிகள்.

14. தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், உயிரியல் விருப்பப்பாடம், பத்தாம் வகுப்பு, மூன்றாம் பதிப்பு 1972.



*நன்றி:* Contribution of Tamil Culture to the Twenty First Century
Volume Three
*உலகத் தமிழ் ஆராய்ச்சி மன்றம்*

# A CRITICAL NOTE ON THE THEORIES OF TRANSLATION

**P.RENGASAMY** Tamil Scholar

Translation has become a universal force to be reckoned with. To interact between languages of various ethnic families, and to bring about integration at global level, its role is vital. It has developed all over the world and is bound to grow well in diverse subjects in the forth-coming centuries. In its coverage, it embraces linguistics, literature, history, psychology, economics and science. It is as old as the tower of Babel, as Edwin Gentzler observes. Yet for a long time, translation was deemed to be a marginal discipline and a shadow of the substance. But now it has gained a separate entry as a full-fledged discipline in the Modern Language Association's International Bibliography (1983).

Linguists and practising translators have formulated theories for translation. But a theory, comprehensive and acceptable in toto, is yet to evolved. A perfect theory in fact is next to impossible. Linguists misconstrue the objectives and methods of translation theory by making a fetish of diagrams, schemes and models. The translation theorists expose inadequate grasp of the principles of linguistics and methods of investigation. However, the translation work continues to be in function all over the world.

Language is a growing process and it cannot be reduced to a static concept. It is this inherent instability that causes translation to be called an art of approximation. Technically speaking any theory for an exact rendering of form and content is hardly achievable for the former operates at the lexical level while the latter at thematic level.

Even in India, where the mutual interaction between the literary works of the ancient languages namely Tamil and Sanskrit have taken place since time immemorial, a practicable theory was hardly perceptible. The earliest extent Tamil grammatical treatise Tolkappiam of the circa 2nd cent. B.C. employs a laconic brevity in classifying translation in a single stanza. It is devoid of a workable formula, even though the process of intellectual linkage has been existing between Tamil and Sanskrit for a very long time.

In Sussan Bassnet's view, the theory of translation is elusive. The purpose of translation theory is to reach an understanding of the processes undertaken in the act of translation but not to provide a set of norms for effecting the perfect translation. Mr. Beaugrande warns that it is of no use to expect that a theoretical model of translation should solve all the problems a translator encounters. The irony is that an aspiring translator need not necessarily be aware of it, before translating any work of art. At the most any one of the existing theories that one gets himself rigidly adhered to, in the course of his scholarly perusal may prevent him from being extremely lopsided and deviating in his renditions. None of the translators has so far ever acknowledged any of the theories but continued to translate works of his choice testifies to the fact that previous knowledge of the theory is not a sheer necessity for any one embarking on this subject.

Among European scholars, the theory has to be elicited from their Works and Prefaces and in cases where the theories are obviously perceptible, they are not wholly relevant and far from being applied in different climes. Besides, the modern theories of translation are not prescriptive but suggestive and descriptive. Peter Bell approaches translation issues by providing text at the outset and from that, towards descriptive rules rather than prescribing or proscribing, a priori, what should be done. Hard and fast rules

may be sustainable in translating science texts but not literary works as the latter are embedded in words and phrases that are of subtle shades of thought, implied meanings and indirect literary echoes besides aesthetic embeillshment at the verbal level.

Moreover the theories formulated are based on the experience of individual translators and the works undertaken. The texts with depth and diversities vary from one another and each one demands a separate handling in translation. No two translators go hand in hand excepting in broader levels of conveying somehow or other, the idea of the source material. Otherwise there would not have been many translations for one and the same work. It is worth mentioning that there are eight translations in English for Geeta Govindam and more than twenty in English for Bhagavat Gita.

Taking the word translation to be mere transformation, even monolingual interpretations are also included in this discipline. Roman Jakobson, George Steiner, I.A. Richards, Ezra Pound, Catford, Eugene Nida, Theordore Savory are a few of the modern European scholars who have contributed to the theory of translation. A brief note on each of their theories and their relevance to us is aimed at in this paper. In its concluding remarks, it points out that no theorist has dealt with the theory of translation in film and media studies. As any other art or discipline, translation is also bound to undergo changes in this computer age in respect of its coverage and operation.

Most of the early theories deal with the effect of the translated material in a given cultural context rather than on the theory behind the creation. Cicro seems to have been toying with an idea whether to go by the word or the sense. "If I render word for word, the result will round uncouth and if I alter anything in the order, I shall have repeated from the function of a translator".

Roughly a few centuries before the 15th or the 16th, the Bible translators perceived translation as having a didactic purpose besides giving importance to intelligibility in the TL text. In fact, the task of the translator went beyond the linguistic and became evangelístic at its own right. "The early Elizabethans like Chapman approached the SL text on technical and metaphysical levels with an indebtedness to the author and the audience. Sonneteers such as Wyatt and Survey showed a faithfulness not to the words or sentence structures but to the meaning of the whole poem in its relationship to its readers.

In the 17th century, Denham viewed the translator and original writer as equals. The translators' duty was to extract what he perceives as the essential core of the work and to recreate the work in the target language. John Dryden with his formulation of three basic types as metaphrase, paraphrase and imitation followed the second as the balanced path between the two extremes of paraphrase and literal translation. In translating Virgil, Dryden said that he would make him speak English as if he would have spoken, if he had been born in 18th century in England. This sums up Dryden's attitude to the way in which translation must be made.

The eighteenth century concept of the translator was that of a painter with a moral duty to the source material and to the receiver. In his principles of Translation, A.F. Tytler sets up three basic points: The translation should give the complete idea of the original text, the style and the manner of writing should be of the same character and the translation should have the lucidity of the original. The crux of the problem is in maintaining the style and manner of the original. What Tytler observes in a way may be possible among languages that belong to one and the same family and also roughly of the same age but cannot be applied when one translates the classical texts of Tamil into English.

In the 19th century, English and German theorists raise the question of defining translation either as a creative or mechanical enterprise. In fact, to a great German translator Friedrich Schledgel (1772-1829) translation belongs to a category of thought rather than an activity with language or literature. This means that the translator is seen as a creative genius in his own right with the genius of his original. Shelley brings out the difficulties of translation, stating that "it use as wise to cast a violet into a crucible that you might discover the formal principle of its colour and odour as to seek to transfuse from one language into another, the creations of a poet.

Later day Victorians such as Mathew Arnold felt that the TL reader must be brought to the SL text through the means of the translation. If the TL reader is that much proficient to come to the original, excellence of style and translator's own ability are of little importance. Edward Fitzgerald

(1809-63) who is known for his version of the Rubaiyat of Omar Khayyam declared that a text must live at all costs in the translation even by bettering the original by some means or other. This amounts to a free translation attempting to excel the original. Fitzgerald's theory of translation brought him popular appreciation but it is disputable whether his work is translation or anything else.

Theory of translation and practice in the first half of the 20th century is in fact the continuation of various Victorian concepts of translation such as literalness. pedantry, archaizing and adaptation. A solid theoretical base, therefore seems to be a remote possiblility. In the present second half of the 20th century, there has been a steady growth of translation studies. The application of linguistics to the study of translation has been proliferating.

1.A. Richards, being an exponent of New criticism points out that the concept of meaning is complex with implicit and explicit values. When the concept of strict literary meaning is elusive and suffers from indeterminacy, any theory of translation based upon notions of equivalence is liable to be contradicted.

Ezra Pound's theory of translation can be elicited from his articles in periodicals such as New Age and Blast. He approaches the problem with this three classification of SL as consisting of musical and visual properties besides complex elements of poetry. His emphasis was less on the meanings of the text or even on the meaning of specific words. In his opinion, language has a life of its own and a power to adapt, mutate and survive. It is these flexible qualities that go far beyond any hard and fast rule in translation.

George Steiner, in his diachronic study of translation makes 'a four-fold division of this art from classical to mdern times. He makes a mention of theories that emanate from practical translations. His second period refers to hermenuetic approach and the methodology of approaching translation. Next comes the application of structural linguistics and communication theroy in the study of translatlion. Steliner's exposition of the theory is more of historical in its perspective and idiosyncractic. It is far from adequate and hardly helpful.

J.C. Catford approaches the translation process in a different angle. He defines translation as that "branch of the applied science of language which is specifically concerned with the problem of the transference of meaning from one set of patterned symbols----- into another set of patterned symbols". The values set up by formal or contextual relations in the SL are not carried over into the TL. The drawback in Catford's approach is that he gets into the subject through a general liguistic theory and as a result, trar tion is studied not as a discipline in its own right but as a way of exemplifying aspects of applied linguistics.

The odore Savory perceives translation as a means of breaking down communication barriers. Though it is said that the discussion remains on an unsystematic level. Savory has an orderliness of his own. He prefers to be an observer and has summarised two types of views on the theory with do's and dont's in translation. However one cannot contradict him when he says that there are no universally accepted principles of translation becuase the translators have never agreed among themselves and there is a volume of confused thought.

In analysing vaious theories, as noted above, we must bear in mind that the history of trarslation theory is an essential field of study but it cannot be approached from a narrow and fixed position. Literary translators differ and distance themselves from the jargon of linguistic approaches. Deconstruction theorists neglect the scientific terminology demanded by semioticians. Hence the theory of translation, as Emilio Carlo observes presents itself in infinite ways and it is still bound to be approached in diverse ways.

**SELECT BIBLIOGRAPHY**


Gentzler, Edwin, (1993) Contemporary Translation Theories, Routledge, London,

Bassnett, Susan, (1980) Translation Studies, Methuen, London and New York.

Bell, Roger T., (1991) Translation and Translating, Longman, London and New York.

Steiner, George, (1975) After Babel; Aspects of Languge and Translation, Oxford University Press, London.

Savory, Theodore, (1957) The Art of Translation, Jonathan cape, London.

H. Brower, Renben (ed.), (1959) On Translation, Cambridge University Press, Cambridge.

H.Catford, J.C., (1965) A Linguistic Theory of Translation, Oxford University Press, London.

H.Jacobson, Bric, (1958) Translation : A Traditional Craft, Nordisk Forlag, Copenhagen.

H.Pound, Ezra, (1954) Literary Essays, Faber, London.

Arnold, Mathew, (1914) Essays by Matthew Arnold, Oxford University Press, London.



*நன்றி:* Contribution of Tamil Culture to the Twenty First Century

Volume Three

உலகத் தமிழ் ஆராய்ச்சி மன்றம்

# பயன்பாட்டு முறையில் வல்லொற்றுச் சந்தி கற்பித்தல்

நா. கோவிந்தசாமி, தமிழறிஞர்

## முன்னுரை

"இன்று பலர் எழுதும் எழுத்துகளில் மிகுதியாகப் பிழைகள் இருப்பதைக் காண்கிறோம். எழுதப் படிக்கத் தெரிந்தவர்களின் தொகை மிகுதியாகும்பொழுது இப்படிப் பிழைகள் மிகுதியாவதும் தவிர்க்க இயலாத ஒன்று என்றே கூறலாம். இருப்பினும் பிழைகள் மலியாமல் பிழைகளைக் குறைப்பதற்கான முயற்சிகளும் நடைபெற வேண்டும். அப்படிப்பட்ட முயற்சிகள் போதிய அளவுக்கு இங்கே நடைபெறவில்லை என்று சொல்வது தவறாகாது. நாம் காணும் பிழைகளில் மிகுதியான பிழைகள் சந்திப் பிழைகளாகவே இருக்கின்றன. ஆகவே சந்திப் பிழைகளைத் தவிர்க்கத் தெரிந்து கொண்டால் மிகுதியான பிழைகள் விலகிவிடும்". (பொற்கோ 1991:V) என்ற முனைவர் பொற்கோ அவர்களின் கூற்றும், "வலிமிகுதல் மிகாமை, தொடர்பில் இது வரையில் பயன்பாட்டு நிலையில் ஓர் ஆய்வும் நடைபெறவில்லை", என்ற முனைவர் தமிழண்ணல் அவர்களின் கூற்றுமே (தமிழண்ணல் 1994: 135) இக்கட்டுரையை இந்த ஆய்வரங்கில் படைப்பதற்கான உந்துதலை எனக்குக் கொடுத்துள்ளன.

வல்லொற்று மிகுதல் தொடர்பான ஒரு பயன்பாட்டு ஆய்வை 1990ம் ஆண்டில் நிகழ்த்தினேன். நான் மேற்கொண்ட ஆய்வு இலக்கண ஆய்வன்று. இலக்கணம் கற்பித்தலை அதிலும் குறிப்பாக வல்லொற்றுச் சந்தி கற்பித்தலை எளிதாக்குவதற்காக மேற்கொள்ளப்பட்ட ஆய்வு அது. நான் மேற்கொண்ட ஆய்வின் முடிவுகளைப் பகிர்ந்து கொள்வது இக்கட்டுரையின் நோக்கம்.

## ஆய்வு தொடர்பான நூல்கள்

சிங்கப்பூர் மாணவர்களின் எழுத்துப் படிவங்களில் காணப்பட்ட பிழைகளை நுட்பமாக மூன்று ஆய்வுகள் ஆய்ந்துள்ளன. அவற்றுள் ஓர் ஆய்வு தொடக்கநிலை மாணவர்கள் பிழைகளை ஆய்ந்ததால் ஒற்றுப்பிழைகளைக் கணக்கில் எடுத்துக்கொள்ளவில்லை. (கோவிந்தசாமி, நா. 1988:7) மற்ற இரு ஆய்வுகளும் உயர் நிலை மாணவர்களின் பிழைகளை ஆய்ந்தன. உயர்நிலை இரண்டாம் ஆண்டில் பயிலும் 14 வயதினரான மாணவர்களின் பிழைகளைச் சொல்வது எழுதுதல் மூலம் 1988ஆம் ஆண்டில் நடத்தப்பட்ட ஆய்வு ஆய்ந்தது. நான்கு ஆசிரியர்கள் தங்களின் கல்வியியல் உயர் சான்றிதழ் கல்விக்காக எங்கள் கல்வி நிறுவனத்தில் இந்த ஆய்வினை மேற்கொண்டனர். மாணவர்கள் செய்த பிழைகளில் ஒற்றுப்பிழையே, 26.7% விழுக்காட்டைப் பெற்று முதல் நிலை வகிக்கிறது என்பதை அந்த ஆய்வு கூறியது. (சொல்வது எழுதுதல் : 310) கல்வி யியல் முதுகலைப் பட்டப்படிப்பிற்காக, திரு கா. இராமையா எங்கள் கல்வி நிறுவனத்தில் மேற்கொண்ட பிழை ஆய்வும், ஒற்றுப் பிழையே 36.42% விழுக்காட்டைப் பெற்று முதல் நிலை வகிக்கிறது என்று கூறுகிறது. (Ramiah, K. 1989:57).

## ஒற்று மிகுதல் ஆய்வினை மேற்கொண்டதற்கான காரணங்கள்

வலி மிகுதல் மிகாமை விதிகள் நூற்றுக்கணக்கில் உள்ளன. பொதுவான சில வரையறைகளில் முடிக்க இயலவில்லை. ஒன்றற்குச் சொன்னது, மற்றதற்குப் பொருந்தவில்லை. இதனால் அறிஞரிடையே குழப்பம் நிலவுகிறது" என்ற முனைவர் தமிழண்ணல் அவர்களின் கூற்று (ஆய்வடங்கல் தொகுதி 1, 1994 : 134) இத்தலைப்பிலான ஆய்வின் அவசியத்தை வலியுறுத்துகிறது.

அறிஞரிடையேகூடக் குழப்பத்தை ஏற்படுத்திக் கொண்டிருக்கும் "வலி மிகுதல் வலி மிகாமை" அமைப்புகளை ஒரு பயன்பாட்டுப் பார்வையோடு ஆராய்ந்து, விதிகளை எளிமைப்படுத்த முடியுமா என்பதைக் காண முயல்வது இந்த ஆய்வு மேற்கொள்ளப்பட்டதற்கான அடிப்படையான காரணமாகும்.

## ஆய்வின் நோக்கம்

தற்காலத் தமிழ் உரைநடையில் புழக்கத்தில் இருக்கும் வலி மிகுதல் அமைப்புகளின் போக்குகளைப் புரிந்து கொள்ள முயல்வது இந்த ஆய்வின் நோக்கம். அவ்வாறு புரிந்து கொண்டால் மட்டுமே, ஒரு பொதுமையாக்கத்திற்கு நாம் வரமுடியும். அவ்வாறு புரிந்து கொள்ளல், வலி மிகும் மிகா விதிகளை எளிதில் கற்பிப்பதற்கும் வழி அமைக்கலாம்.

## ஆய்வு வினா

தற்காலத் தமிழ் உரையில் பயன்படுத்தப்படும் வலிமிகுதல் அமைப்புகளைச் சில வகைகளுக்குள் அடக்க முடியுமா என்பதே இந்த ஆய்வின் வினாவாகும்.

## ஆய்வுக் கருவிகளும் ஆய்வைச் செய்த முறையும்

ஆய்வின் சுமார் 300 சொற்கள் கொண்ட 28 தரமான உரைநடைப் பகுதிகள் இந்த மாதிரிகள் 28 உரைநடைப்பகுதிகள் 28 எழுத்தாளர்களால் எழுதப்பட்டவை.

28 உரைநடைப் பகுதிகளில் இடம்பெற்றிருந்த வலி மிகுதல் அமைப்புகள் அடையாளம் காணப்பட்டுத் தொகுக்கப்பட்டன. பின் அவை பல்வேறு வகைகளாக வகைப்படுத்தப்பட்டன.

## வலி மிகுதல் புழக்கமும் வகைப்படுத்துதலும்

மொத்தம் 943 வலி மிகும் அமைப்புகள் 28 பகுதிகளில் காணப்பட்டன. இத்தனை வகைக்குள் தான் அடக்க வேண்டும் என்றில்லாமல், மிகத் திறந்த மனத்தோடு இந்த வலி மிகும் அமைப்புகள் வகைப்படுத்தப்பட்டன. அடையாளம் காணப்பட்ட அனைத்து வலி மிகும் அமைப்புகளும் பத்து வகைக்குள் அடங்கின.

கீழ்க்காணும் அட்டவணை வலி மிகுதல் புழக்கத்தை விளக்கிடும்:

| | எண்ணிக்கை | | |
|---|---|---|---|
| 1. | இருபெயர் வடிவங்கள் | 230 | 24.65% |
| 2. | வினை எச்ச/அடை வடிவங்கள் | 215 | 23.04 % |
| 3. | இரண்டாம் வேற்றுமை உருபேற்ற வடிவங்கள் | 210 | 22.50% |
| 4. | வன்தொடர்க் குற்றியலுகர வடிவங்கள் | 106 | 11.36% |
| 5. | நான்காம் வேற்றுமை உருபேற்ற வடிவங்கள் | 75 | 8.03% |
| 6. | சுட்டுப் பெயரடை, வினையெச்ச வடிவங்கள் | 38 | 4.07 % |
| 7. | தனிநிலை, ஒட்டுநிலை இடைச்சொல் வடிவங்கள் | 34 | 3.64 % |
| 8. | முற்றியலுகர வடிவங்கள் | 17 | 1.82 % |
| 9. | ர், ழ், ய் எழுத்துகளை ஈற்றில் பெற்ற வடிவங்கள் | 5 | 0.53 % |
| 10. | ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம் | 3 | 0.32% |

இந்தப் பத்து வகைகள் ஏன் அவ்வாறு வகைப் படுத்தப்பட்டன என்பதை இனிப் பார்ப்போம்.

#### 1. முதல் வகை : பெயர்களில் வலி மிகுதல்

இரண்டு பெயர்ச்சொற்கள் சேரும்போது உருவான வலிமிகும் அமைப்புகள் எல்லாம் இந்த வகையில் அடக்கப் பட்டன. இந்தப் புழக்கம் 24.65 விழுக்காடாகும் இந்த அமைப்புகள் தோன்றலாகவும், திரிதலாகவும் அமைந்தன அவற்றுள் சில எடுத்துக்காட்டுகளை இனிப் பார்ப்போம். இந்த எடுத்துக்காட்டுகள் ஆய்வுக்காக எடுத்துக்கொள்ளப்பட்ட 28 மாதிரிகளிலிருந்து பெறப்பட்டவை

1. தமிழ்ப் புலமை 2. உணர்ச்சிக் குறி 3. புலமைப் போக்கு 4. ஆருயிர்க் கணவன் 5. அடிப்படைப் பண்பு 6. அரபுத் தமிழ் 7. அணுகுமுறைச் செம்மையும்

1. இலக்கியத் தென்றல் 2. ஆங்கிலக் குறியீட்டுமுறை 3. பாடத்திட்டம் 4. கவனக் குறைவு 5. இஸ்லாமியத் தமிழறிஞர்கள்

#### நான் எதிர்கொண்ட ஒரு சிக்கலும்; கொண்ட தீர்வும்

எல்லாக் கல்லூரிகளிலும், எல்லாச் சூழ்நிலையும் போன்ற சொற்றொடர்களை நான் எதிர்கொண்டபோது இந்த அமைப்புகளை எந்தவகையில் அடக்குவது என்பதில் எனக்கு ஒரு சிக்கல் ஏற்பட்டது. கல்லூரிகள் எல்லாம் மூடப்பட்டன, சூழ்நிலைகள் எல்லாம் சரியாக உள்ளன என்பன போன்ற வழக்குகள் இன்றையப் பயன்பாட்டில் அதிகம் இல்லை. எல்லாக் கல்லூரிகளும் மூடப்பட்டன. எல்லாச் சூழ்நிலைகளும் சரியாக உள்ளன போன்று எழுதும் வழக்கமே இன்றைய வழக்காகிவிட்டது. எல்லாம் என்ற பெயர்சொல்லின் திரிபாக எல்லா என்ற சொல்லை ஏற்று, இரு பெயர் வகையினுள் இந்த அமைப்பை நான் அடக்கினேன். 1992ஆம் ஆண்டில் வெளி வந்த கிரியா அகராதியும் இச்சொல்லைப் பெயர்ச் சொல்லாகவே வகைப்படுத்துகிறது. (கிரியா 1992 : 181)

#### 2. இரண்டாம் வகை : வினை எச்சங்கள் / ஆக, ஆய் ஆகிய பின்னொட்டுகளைப் பெற்ற வினை அடைகளின் பின் வலி மிகுதல்

அகர இகர ஈற்றுத் தெரிநிலை குறிப்பு வினை எச்சங்களும், ஆக ஆய், முதலான பின்னொட்டுகளைப் பெற்ற வினையடைகளும் இவ்வகையில் அடக்கப்பட்டன. போய் என்ற வினை எச்சமும் இதில் அடக்கம். இதன் புழக்கம் 23.04 விழுக்காடாகும்.

#### எடுத்துக்காட்டுகள்

1. போற்றிப் புகழ்கின்ற 2. சோம்பித் திரிவர் 3. தழுவிக் கொள்வோம் 4. பார்க்கப்படும்போது 5. வாழக் காண்போம் 6. காணப் பெறும் 7. வாழத் துணிகிறாள் 8. குறையத் தொடங்கியது 9. சரிவரச் செய்து 10. செய்யப் பழகாத 11. வளரத் துணை புரிவன 12. எழுதப் படிக்கும் 13. நன்றாகப் புரிந்துகொள் 14. முறையாகக் கல்வி கற்க 15.தண்ணீராகச்செலவாகியது 16.எளிதாகச்சொல்லிவிடலாம் 17 நூற்றாண்டுகளாகத் தமிழ் வாழ்கிறது 18. மிகுந்தவையாய்ப் பயன்படும் 19 தெளிவாய்ச் சொல்லியுள்ளனர் 20. கசப்பும் இன்றித் தொடர்பு மொழியாக விளங்குகிறது.

#### 3. மூன்றாம் வகை : இரண்டாம் வேற்றுமை உருபுக்குப் பின் வலி மிகுதல்

இரண்டாம் வேற்றுமை உருபுக்குப் பின் வலி மிகும் அமைப்புகள் அனைத்தும் இந்த வகையில் அடக்கப்பட்டன. இதனுடைய புழக்கம் 22.50 விழுக்காடாகும்.

#### எடுத்துக்காட்டுகள்

1. உரசொலியைத் தொடர்ந்து 2. கடமையைச் சரிவர

#### முதல் மூன்று வகைகளைப் பற்றிய ஒரு குறிப்பு

என்னுடைய இந்த ஆய்வில் இரு பெயர் வடிவங்கள், வினை எச்ச வடிவங்கள், இரண்டாம் வேற்றுமை உருபேற்ற வடிவங்கள் ஆகிய இந்த மூன்று வகைகளின் புழக்கம் 70.19 விழுக்காடாக உள்ளது. புழக்க அடிப்படையில் பார்க்கும்போது இந்த மூன்று வகைகளுமே நெருக்கமான புழக்க நிலையில் இருக்கின்றன. (24.65%, 23.04%, 22.50%) இந்த மூன்றில் எந்த வகை அதிகமான புழக்கத்தைப் பெற்றுள்ளது என்று பார்ப்பதைவிட, இந்த மூன்றின் மொத்தப் புழக்கம் 70.19 விழுக்காடு என்ற ஆய்வின் கண்டுபிடிப்பை மனத்தில் நிறுத்தினால் சிறந்த விளைவுகள் ஏற்படும்.

#### 4. நான்காம் வகை : வன்தொடர்க் குற்றியலுகரத்திற்குப் பின் வலி மிகுதல்

வன்தொடர்க் குற்றியலுகரத்திற்குப் பின் வலி மிகும் அமைப்புகள் அனைத்தும் இந்த வகையில் அடக்கப்பட்டன. நான்காம் வேற்றுமை உருபேற்ற வடிவத்தை இந்த வகையில் அடக்கவில்லை. அது ஒரு தனி வகையாகவே கொள்ளப்பட்டது. இந்த வகையின் புழக்கம் 11.36 விழுக்காடாகும்.

#### எடுத்துக்காட்டுகள்

1. ஏற்றுக் கொள்ள 2.கையெழுத்துப் போட்டுவிட்டு 3. பார்த்துக் கொண்டிருந்த 4. குறித்துக் கொள்க 5. பிரித்துக் கொண்டார்கள் 6. போட்டுத் தவறாக எழுதினர்

#### 5. ஐந்தாம் வகை : நான்காம் வேற்றுமை உருபேற்ற சொற்களுக்குப் பின் வலி மிகுதல்

நான்காம் வேற்றுமை உருபுக்குப் பின் வலிமிகும் அமைப்புகள் அனைத்தும் இந்த வகைக்குள் அடக்கப்பட்டன. இதன் புழக்கம் 803 விழுக்காடாகும்

எடுத்துக்காட்டுகள்

1. படைப்புக்குத் துணையாக நின்றது 2. பம்பாய்க்குச் செல்கிறாள் 3. நடைமுறைக்குத் தடையாக உள்ளது

6. ஆறாம் வகை : சுட்டுப் பெயரடை வடிவம், வினையடை வடிவங்களின் பின் வலி மிகுதல்

அந்த, இந்த, எந்த ஆகிய சுட்டுப் பெயரடைக்குப் பின்னும், அங்கு, இங்கு, எங்கு, அப்படி, இப்படி, எப்படி போன்ற வினையடைகளுக்குப் பின்னும் வலி மிகும் அமைப்புகள் அனைத்தும் ஆறாம் வகையில் அடக்கப்பட்டன. "கிரியாவின் தற்காலத் தமிழ் அகராதி" இந்தச் சொற்களைச் சுட்டுப் பெயரடையாகவும், வினையடையாகவும் வகைப்படுத்தி இருப்பது இங்குக் கவனிக்கத்தக்கது. (கிரியா 1992) இதன் புழக்கம் 4.07 விழுக்காடு மட்டுமே.

எடுத்துக்காட்டுகள்

1. அங்குப் போகும்போது 2. இந்தச் சாதனையை 3. எப்படிக் கற்றாய்?

ஏழாம் வகை : தனிநிலை, ஒட்டுநிலை இடைச்சொற்களுக்குப் பின் வலி மிகுதல்

இனி, தனி, மற்ற, தவிர, போல, விட, கூட, மிக, பற்றி, என போன்ற தனிநிலை ஒட்டுநிலை இடைச்சொற்களுப்பின் வலி மிகும் அமைப்புகள் அனைத்தும் இந்த வகைக்குள் அடக்கப்பட்டன. இதன் புழக்கம் 3.64 விழுக்காடாகும்.

எடுத்துக்காட்டுகள்

1. தனிப்பயிற்சி 2. மற்றச் சிறுவர்கள் 3. ஏற்பட்டுவிடக் கூடாது 4. ஒழுங்குபடச் செய்தார் 5. மிகச் சிறப்பாகச் செய்தார் 6. போலச் செய்தலின் 7. அவனைத்தவிரக் கேட்பவர் யார்?

8. எட்டாம் வகை : முற்றியலுகரத்திற்குப் பின் வலி மிகுதல்

தனிக்குறிலை அடுத்துவரும் முற்றியலுகரத்திற்குப் பின் வலி மிகுந்த அமைப்புகள் அனைத்தும் இந்த வகையில் அடக்கப்பட்டன. இந்த புழக்கம் 3.67 விழுக்காடு மட்டுமே.

எடுத்துக்காட்டுகள்

1. முழுப் பொறுப்பு 2. திருப்பாவை 3. புதுக் கவிதை 4. புதுத் தெம்பு

9. ஒன்பதாம் வகை : ர், ய், ழ் ஆகிய மூன்று மெய் ஈற்றின் பின் வலி மிகுதல். (இரு பெயர் வடிவம் அல்லாத அமைப்புகள்)

ர், ய், ழ் ஆகிய மூன்று மெய் ஈறுகள், இரு பெயர் வடிவங்களிலேயே அதிகப் புழக்கத்தில் உள்ளன. இரு பெயர் வடிவம் அல்லாத மற்ற அமைப்புகள் இந்த வகையில் அடக்கப்பட்டன. மொத்தம் ஐந்து மட்டுமே நான் ஆய்வுக்காக எடுத்துக் கொண்ட மாதிரிகளில் பயன்பாட்டில் இருந்தன. இதன் புழக்கம் 0.53 விழுக்காடு மட்டுமே.

எடுத்துக்காட்டுகள்

1. முன்னர்க் கண்டோம் 2. கீழ்க்காணும் 3. முன்னர்க் கூறப்பட்டது

10. பத்தாம் வகை : ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சத்தின் பின் வலி மிகுதல்

மிகக் குறைவான புழக்கத்தில் இருக்கும் ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சத்தின் பின் வலி மிகுந்த அமைப்புகள் இந்த வகையில் அடக்கப்பட்டன. மொத்தம் மூன்று மட்டுமே பயன்பாட்டில் இருந்தன. இதன் புழக்கம் 0.32 விழுக்காடு மட்டுமே.

எடுத்துக்காட்டு

1. முறைசாராக் கல்வி

இறுதி நான்கு வகைகளைப் பற்றிய குறிப்புகள்

நாம் இறுதியாகப் பார்த்த நான்கு வகைகளின் மொத்தப் புழக்கம் 10.42 மட்டுமே. ஆனாலும்கூட மாணவர்களுக்கும் எழுதுபவர்களுக்கும் சிக்கலைக் கொடுக்கக்கூடிய இடங்கள் வை.

முடிவுகள்

1. தற்காலத் தமிழ் உரைநடையில் புழக்கத்தில் இருக்கும் வலி மிகும் அமைப்புகளைப் பத்து வகைகளில் அடக்கமுடியும் என்பது இந்த ஆய்வு மூலம் கண்டறியப்பட்டுள்ளது.

2. தமிழில் புழங்கும் வலி மிகும் விதிகளை, ஒரு பொதுமையாக்கத்திற்குக் கொண்டு வந்து, அவற்றை எளிமைப்படுத்திவிடலாம் என்பதை இந்த ஆய்வு கண்டறிந்தது.

3. இரு பெயர் வடிவம், வினை எச்ச வடிவம், இரண்டாம் வேற்றுமை உருபேற்ற வடிவம், வன்தொடர்க் குற்றியலுகர வடிவம், நான்காம் வேற்றுமை உருபேற்ற வடிவம் ஆகிய இந்த ஐந்து வகைகளிலேயே வலி மிகுதல் அதிக அளவில் புழங்குகிறது என்பதையும் இந்த ஆய்வு கண்டறிந்தது. (89.58%)

வலி மிகா இடங்கள்

பன்னிரண்டு ஆண்டுகள் தமிழை இரண்டாம் மொழியாகக் கற்றுத், தமிழாசிரியர் பயிற்சிக்கு வரும் என் மாணவர்கள் செய்த ஒற்றுப்பிழை ஆய்வை இனிப் பார்ப்போம்.

வலி மிகும் ஆய்வுக்காக எடுத்துக் கொள்ளப்பட்ட உரைநடைப் பகுதிகளில் நான்கு, சொல்வது எழுதுதல் பயிற்சியாக மாணவர்களுக்குக் கொடுக்கப்பட்டுப் பிழைகள் சேகரிக்கப்பட்டன. பிழைகள் வகைப்படுத்தப்பட்டு, சில முடிவுகள் காணப்பட்டன.

சுமார் 300 சொற்களைக் கொண்ட நான்கு பகுதிகளில் இருபது மாணவர் செய்த மொத்த ஒற்றுப்பிழைகள் 369 ஆகும். இவற்றுள் 296 பிழைகள் வலி மிக வேண்டிய இடத்தில் ஒற்றுப் போடாததால் ஏற்பட்ட பிழைகளாகும். 73 பிழைகள் ஒற்றுப்போடக் கூடாத இடத்தில் போட்டதினால் ஏற்பட்ட பிழைகளாகும். ஒற்றுப்போடக்கூடாத இடத்தில் போட்டதினால் ஏற்பட்ட பிழைகளை நுணுகிப் பார்த்ததில் கீழ்க்காணும் முக்கிய முடிவுகள் பெறப்பட்டன.

1. 46.57 விழுக்காட்டுப் பிழைகள் பெயர் எச்சங்களில் செய்யப்பட்டிருந்தன.

2. 17.80 விழுக்காட்டுப் பிழைகள் இரு வட சொற்களின் இணைப்பில் நிகழ்ந்தன.

3. எழுவாய்த் தொடரில் 16.43 விழுக்காட்டுப் பிழைகளை மாணவர் செய்திருந்தனர்.

4. மென்தொடர், இடைத்தொடர்க் குற்றியலுகரங்களில் செய்த பிழைகள் 9.58 விழுக்காடாகும்.

5. “படி” பின்னொட்டில் செய்த பிழைகள் 4.10 விழுக்காடாகும். 12

## பரிந்துரை

ஆய்வு முடிவுகளின் அடிப்படையில், எளிமைப் படுத்தப்பட்ட விதிகளைக் கற்பிப்பதில் ஆசிரியர்கள் சிறப்புக் கவனம்காட்டினால்,மாணவர்கள்செய்யும்தொண்ணூற்றுக்கு மேற்பட்ட ஒற்றுப் பிழைகள் குறைவதற்கான வாய்ப்பு ஏற்படும்

## எளிமைப்படுத்தப்பட்ட சந்தி விதிகள்

விதி 1.நிலைமொழியும் வருமொழியும் பெயர்ச்சொற்களாக இருந்தால், கீழ்க்காணும் விதிவிலக்குகளைத் தவிர்த்த மற்ற இடங்களில் கண்டிப்பாக வலி மிகும்.

விதி விலக்குகள் கீழ்க்காணும் இடங்களில் வலி மிகாது.

1. உயர்திணைப் பெயர்களை முதல் உறுப்பாகக் கொண்ட தொகைகளில் (எ.கா) 1. தமிழர் பேரவை மிகாது.

2. உம்மைத் தொகையில் வலி மிகாது. (எகா) 1. தாய் தந்தை. இதில் உள்ள ஒரு விதி விலக்கு; இராப்பகல்

3. வினைப்பெயர்போல் இயங்கும் வினையடியும், பெயரும் சேர்ந்து ஒரு சொல்போல் ஆகி வரும் வினைத்தொகையில் வலி மிகாது. (பொற்கோ, 1991:28) (எ.கா) 1. செய்தொழில் 2. கொல்யானை.

4. இரு பெயர்ச்சொற்கள் அடுத்தடுத்து அடுக்கு நிலையில், அடுக்குத் தொடராக வந்தால் வலி மிகாது. (எ கா) 1. பாம்பு பாம்பு 2. புலி புலி

5. நிலைமொழியும் வருமொழியும் வடசொற்களாக இருந்தால் வலி மிகாது. (எ.கா) 1. பாத காணிக்கை

6. எண்ணுப் பெயருக்குப் பின் வலி மிகாது. (எ.கா) 1. ஒரு பூனை

2. இரண்டு கண்கள் (குறிப்பு : எட்டு, பத்து ஆகிய இரண்டு வன்தொடர்க் குற்றியலுகர வகையில் அடங்கும்)

விதி 2 : அகர இகர ஈற்று வினை எச்சங்களுக்குப் பின்னும், ஆக, ஆய், போய் ஆகிய பின் ஒட்டுகளைப் பெற்ற வினையடைகளுக்குப் பின்னும் வலி மிக வேண்டும்.

விதி 3 : இரண்டாம் வேற்றுமை உருபேற்ற சொற்களுக்குப் பின் வலி மிக வேண்டும்.

விதி 4 : வன்தொடர்க் குற்றியலுகரத்திற்குப் பின் வலி மிக வேண்டும். விதி 5 : நான்காம் வேற்றுமை உருபேற்ற சொற்களுக்குப் பின் வலி மிக வேண்டும்.

விதி 6 : சுட்டுப் பெயரடை, வினையடைகளுக்குப் பின் வலி மிகும்

விதி 7 : தனி நிலை இடைச்சொற்களுக்குப் பின்னும், ஒட்டு நிலை இடைச்சொற்களுக்குப் பின்னும் வலி மிகும்.

விதி 8 : தனிக் குறிலையடுத்து வரும் முற்றியலுகரத்திற்குப் பின் வலி மிகும்

விதி 9 : ர், ய், ழ் ஆகிய மூன்று மெய் ஈற்றின் பின் வலி மிகும். (இரு பெயர் வடிவம் அல்லாத மற்ற அமைப்புகள்)

விதி 10 : ஈறுகெட்ட எதிர்மறைப் பெயர் எச்சத்தின் பின் வலி மிகும்

சில முக்கியமான வலி மிகாத இடங்கள் மாணவர்கள் செய்த பிழைகளை அடியொற்றிப் பரிந்துரைக்கப்படுகின்றன.

விதி 11 : பெயர் எச்சம், பெயர் அடையின் பின் வலி மிகாது.

விதி 12 : எழுவாய்த் தொடரில் வலி மிகாது.

விதி 13 : மென்தொடர், இடைத்தொடர்க் குற்றியலுகரங்களின் பின் வலி மிகாது.

விதி 14 : இரண்டாம் வேற்றுமைத்தொகையில் வலி மிகாது.

விதி 15 : “படி” என்னும் பின்னொட்டின் பின் வலி மிகாது.

விதி 16 : நான்காம் வேற்றுமைத்தொகையில் வலி மிகாது.

## முடிவுரை

தற்காலத் தமிழில் சந்தி பற்றி ஒருமித்த கருத்து இன்னும் உருவாகாத நிலையில் இந்தச் சிறிய ஆய்வின் முடிவுகள் இந்த ஆய்வரங்கில் முன் வைக்கப்படுகின்றன. இதனை ஒட்டிச் சிந்திப்பவர்களுக்கு இது ஒரு சிறு வெளிச்சத்தைக் கொடுக்கலாம். இத்தலைப்பினை ஒட்டி இன்னும் பலர் சிந்தித்தால், தற்காலத் தமிழில் புழங்கும் சந்தி விதிகளை நாம் ஒழுங்குபடுத்தி விடலாம். எதிர்கால ஆய்வாளர்கள் இதனை ஒட்டிச் சிந்திக்கட்டும்.

## BIBLIOGRAPHY

1. பொற்கோ (1992) தமிழில் நீங்களும் தவறில்லாமல் எழுதலாம், புதுவாழ்வுப் பதிப்பகம், சென்னை.

2. தமிழண்ணல், (1994) இரண்டாவது உலகத் தமிழாசிரியர் மாநாட்டு ஆய்வடங்கல், தொகுதி : ஒன்று, மலேசியா

3. கோவிந்தசாமி. நா, (1988) ‘சொல்வது எழுதுதலை ஒரு குறையறி கருவியாகப் பயன்படுத்துதல்’, சொல்வது எழுதுதல் ஆய்வரங்கக் கட்டுரைகள், கல்விக் கழகம், சிங்கப்பூர்.

4. Ramiah. K, (1989) Linguistic difficulties encountered by secondary four Tamil students in their Tamil compositions, National University of Singapore.

5. 1988 ஆம் ஆண்டின் சொல்வது எழுதுதல் ஆய்வுகள், (1994), ஆய்வறிக்கை, சிங்கப்பூர்.

6. கிரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, (1992), சென்னை.

*நன்றி:* Contribution of Tamil Culture to the Twenty First Century Volume Three

*உலகத் தமிழ் ஆராய்ச்சி மன்றம்*

# தேசியப்படை மாணவர் பயிற்சி ஏவல்கள்



| | ஆங்கிலம் | தமிழ் | இந்தி (ஆங்கில (உரோம) எழுத்தில் |
|---|---|---|---|
| 1 | Double march | ஓடிச்செல்க | Daur ke-chal |
| 2 | Quick march | முடுகிச்செல்க | Tez chal |
| 3 | Halt | நிற்க | Tham |
| 4 | Step out | நீளெட்டு (வைக்க) | Lamba qadam |
| 5 | Step short | குற்றெட்டு (வைக்க) | Chaota qadam |
| 6 | Wheel right/left | வலம்/இடம் வளைக | Dahine/baen ghoom |
| 7 | Marktime | அடியிரட்ட | Qudam tal |
| 8 | Salute | கையெடுக்க | Siloot |
| 9 | General salute | பொதுக் கையெடுப்பு | General siloot |
| 10 | National salute | தேசியக் கையெடுப்பு | Rashtriya siloot |
| 11 | Salute to the front - salute | முன்கையெடுப்புகையெடுக்க | Samne siloot-siloot |
| 12 | Salute to the right-salute | வலம் கையெடுப்புகையெடுக்க | Dahine siloot siloot |
| 13 | Salute to the left-salute | இடம்கையெடுப்பு | Baen siloot-siloot |
| 14 | Saluting by numbers | எண்முறைக் கையெடுப்பு | Ginti se siloot |
| 15 | Eyes right (or left) | வலம்பார்க்க | Dahine siloot siloot |
| 16 | Eyes right (or left) | முன்பார்க்க | Samne dekh |
| 17 | Slope-arms | படைக்கலம்சாய்க்க | Kandhe shast(r) |
| 18 | Order-arms | படைக்கலம் நிறுத்த | Bazu shast(r) |
| 19 | For inspection | உண்ணோட்டத்திற்காக | Nirikashan ke lie |
| 20 | Examine arms | படைக்கலம் தேர்க | Janch shast(r) |
| 21 | Trail arms | படைக்கலம் துலவ | Tol shast(r) |
| 22 | On-guard | காவல்மேல் | Ton shast(r) |
| 23 | Squad will fix bayonets-sangin | சதளம் ஈட்டி செருக ஈட்டி செருக | Squad sangin lagao fix bayonets |
| 24 | squad will unfix-bayonets-unfix bayonets | சதளம் ஈட்டி உருவ ஈட்டி உருவ | Squad sangin uthare(g) uthar sangin |

## விளக்கம் :

4, 5. நீளெட்டு, குற்றெட்டு என்றாலும் போதும். வைக்க என்றும் இடுக என்றும் சொல்லலாம். எட்டு நீள்க, எட்டுக் குறுக என்றும் சொல்லலாம்.

7. அடியிரட்டுதல் இட்ட அடியின் மேல் அடியிடுதல்: To step without advancing, to mark time. “அடியிரட்டித் திட்டாடுமாட்டு” (புறப்பொருள் வெண்பா மாலை. 2.8).

8. ஒருகை வணக்கத்திற்குக் கையெடுத்தல் என்னும் சொல் மிகப் பொருத்தமானதாம்.

17. படைக்கலம் என்பது arm என்பதுபோல பொதுச்சொல், துப்பாக்கி என்பது துபக் என்னும் துருக்கிச் சொல். துமுக்கி என்பது தமிழ்ச்சொல்.

19. உண்ணோடு - to inspect.

21. துலவுதல் - துலாக்கோல் போல் தொங்கப் பிடித்தல், to let rifles hang balanced in one hand. இது வழக்கற்றுப் போன பழஞ்சொல். துல் - துலா - துலாம். துல் - துலை=ஒப்பு. துலாக்கோல் (தராசு). தோல் என்னும் இந்திச்சொல் துல் என்பதன்திரிபே.

22, 23. காவல்மேல் என்பது வேலைமேல் என்பது போன்றவழக்கு. ஏவல்வினைகள் செய்ய, செய்க என்னும் இருவடிவில் உள்ளன. இவை ஈரெண் பொது. சதளம் என்னும் தொகுதிப் பெயரை ஒருமையாகக் கொண்டு செய் என்னும் ஒருமை வடிவிலும் ஏவலாம். பயிற்சியாசிரியர் வேண்டிய திருத்தமும் செய்துகொள்ளலாம்.

# அகரமுதலி இயக்ககம் நெறிப்படுத்தும்
# பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம்!

பிறமொழிக் கலைச்சொற்களுக்கு இணையான தமிழ்க் கலைச்சொற்களை உருவாக்கி மக்களின் புழக்கத்திற்குக் கொண்டுவரவேண்டியது காலத்தின் தேவையாகும். மொழிக்காப்பிற்கான முகாமையான பணிகளில் இதுவும் ஒன்றாகும்.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் நெறிப்படுத்தலில், 2021 அக்டோபர் 1 ஆம் நாளிலிருந்து வெள்ளிதோறும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம் நடத்தப்பெறுகிறது. புறநிலையில் உள்ள சொல்லாக்க வல்லுநர்களின் துணையோடு தமிழின் கலைச்சொல் வளத்தை உயர்த்தும் நோக்கில் நடத்தப்பெறும் இப்பயிலரங்கத்தின் 10 - 14 வரையிலான அமர்வுகள் 2021 டிசம்பர் 3, 10, 17, 24, 31 ஆகிய நாள்களில் நடைபெற்றன. 12 ஆவது அமர்வில் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழக மேனாள் துணைவேந்தர் முனைவர் ம. இராசேந்திரன் அவர்கள் வாழ்த்துரை வழங்கினார். அப்பிலரங்க நிகழ்வுகளில் அயல்நாட்டு அறிஞர்கள், உள்நாட்டு அறிஞர்கள் பங்கேற்றுப் பல்வேறு துறைசார்ந்த தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றினர்.

சொல்லாய்வாளர்கள், சொல்லாக்க அறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், பேராசிரியர்கள் உள்ளிட்ட பலர் பங்கேற்றும் பார்த்தும் பயன்பெற்றனர். கலைச்சொற்களை அறிமுகம் செய்த சொலாக்க அறிஞர்களுக்கும், பங்கேற்பாளர்களுக்கும் இயக்ககத்தின் சார்பில் பாராட்டுச் சான்றிதழ்களும் பங்கேற்புச் சான்றிதழ்களும் வழங்கப்பட்டன.

**03.12.2021ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்**



முனைவர் உமா அழகிரி
மகாத்மா காந்தி நிறுவனம்,
மொரீசியசு



திரு. சிவா பிள்ளை
மேனாள் கணினி அதிகாரி,
கோல்ட்சுமித் பல்கலைக்கழகம்,
இலண்டன்



முனைவர் முஹம்மது அஷ்கர் உத்மான்
முதுநிலை விரிவுரையாளர்,
தேசிய சமூக அபிவிருத்தி நிறுவகம்,
இலங்கை



முனைவர் இரா. கு. ஆல்துரை
மேனாள் தொகுப்பாளர்,
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்,
சென்னை



மரு. ப. நிர்மலா தேவி
பேராசிரியர் (ம) துறைத்தலைவர்,
தோல் பால்வினை (ம) தொழுநோய்துறை, திருநெல்வேலி மருத்துவக்கல்லூரி (ம) மருத்துவமனை

**10.12.2021 ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்**



மரு. முனைவர் அ. யோசெப்யூட்
துணைப் பேராசிரியர்,
மருந்தியல் ஆராய்ச்சித்துறை,
நியூசெர்சி, அமெரிக்கா



பேரா. பெஞ்சமின் இலெபோ
மேனாள் நிருவாகத்துறைஅதிகாரி,
கிருஸ்டியன் லக்ருவா பன்னாட்டு நிறுவனம்,
பாரிசு



பேரா. முனைவர் சுபதினி ரமேஷ்
மொழியியல் ஆங்கிலத்துறை,
யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்,
இலங்கை

தமிழ்த்திரு. சே. பானுரேகா
தலைவர்,
உலகத் திருக்குறள் படைப்பு மையம்,
சென்னை



## 17.12.2021ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

திரு. நை. விஜயகுமார்
தமிழ்ச்சங்கத் தலைவர்,
தமிழ்மொழி (ம) கலாச்சார மையம்,
கேன்டர்பரி வட்டாரம், நியூசிலாந்து



பொறிஞர் பத்மப்ரியா இராகவன்
இயக்குநர், டிவைன் இந்தியா நிறுவனம்,
பாரிசு



பொலிகையூர் ரேகா
எழுத்தாளர்,
இலங்கை



கவிஞர் மெய்ஞானி பிரபாகரபாபு
உரையாசிரியர்,
நூல் மதிப்புரையாளர்,
சென்னை



முனைவர் ஹ. அல்தாஜ் பேகம்
உதவிப் பேராசிரியர்,
ஸ்ரீ பராசக்தி மகளிர் கல்லூரி,
குற்றாலம்



## 24.12.2021ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

பேரா. முனைவர் பெ. ஹரிபாலன்
ஒருங்கிணைப்பாளர்,
கொரியா தமிழ்ப் பேரவை



திரு. சே. சதீஷ்குமார்
தலைவர்,
சப்பான் தமிழ்ச் சங்கம்



பொறிஞர் பெ. செல்வக்குமார்
தலைவர், முன்சென் தமிழ்ச் சங்கம்,
செருமனி



முனைவர் இரா. குறிஞ்சிவேந்தன்
பேராசிரியர் (ம) தலைவர்,
அயல்நாட்டுத் தமிழ்க் கல்வித்துறை,
தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்



திரு. ஆக்கம் அ. மதிவாணன்
வழக்கறிஞர்,
மொழிபெயர்ப்பு வல்லுநர், சென்னை



## 31.12.2021ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

திரு. சண்முகம் நித்தியானந்தம்
மக்கள் தொடர்பு (ம)
மனிதவள மேம்பாட்டுத்துறை மேலாளர்,
அண்ணா மருத்துவக் கல்லூரி,
மொரிசியசு



முனைவர் கனகசபை இரகுபரன்
மொழித்துறை,
தென்கிழக்குப் பல்கலைக்கழகம்,
இலங்கை



பேரா. பாலசுந்தரம் இளையதம்பி
அண்ணாமலை வளாகத்
தமிழ்த்துறைத் தலைவர்,
கனடா



திரு. நா. சு. சிதம்பரம்
ஆசிரியர், அறிவியல் ஒளி திங்களிதழ்,
சென்னை



முனைவர் தெ. வெற்றிச்செல்வன்
உதவிப் பேராசிரியர்,
அயல்நாட்டுத் தமிழ்க்கல்வித்துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.



# அறிஞர்கள் வழங்கிய கலைச்சொற்களுள் சில :

**முனைவர் உமா அழகிரி**

| | |
|---|---|
| Kitchen towel | கார்த்துணி |
| Ancestral language | மூதாதையர் மொழி |
| Learning objective | கற்றல் விளைவு |
| Copybook | பயிற்சிநூல் |
| Flash card | மின்னட்டை |

**திரு. சிவா பிள்ளை**

| | |
|---|---|
| Corn flakes | சோள அவல் |
| Teleporting | விண்காவு / விண்காவுதல் |
| Trimmer | நறுக்குதல் / நறுக்கி |
| Sticky notes | ஒட்டுக்குறிப்பு |
| Spike buster | உயர்மின் காப்பான் |

**முனைவர் முஹம்மது அஷ்கர் உத்மான்**

| | |
|---|---|
| Counselling | உளவளத்துணை |
| Social work | சமூகப்பணியியல் |
| Cognition | அறிகை |
| Psychotherapy | உளக்குணமாக்கல் / உளச்சிகிச்சை |
| Role | வகிபாகம் |

**முனைவர் இரா. கு. ஆல்துரை**

| | |
|---|---|
| Philology | மொழிநூல் |
| Pronoun | மூவிடப்பெயர் / பெயர்ப்பதிலி / பகரப்பெயர் / மாற்றுப்பெயர் |
| Dialect area | கிளைவழக்குப் பரப்பு |
| Empty morph | வெற்றுருபு |
| Glottology chronology | சொற்கோவைப் புள்ளியியல் |

**மரு. ப. நிர்மலா தேவி**

| | |
|---|---|
| Nail pitting | நகம் புள்ளிக்குழிவு / உகிர்ப்புள்ளிக்குழிவு |
| Nail Dystrophy | நகச்சிதைவு / உகிர்ச்சிதைவு |
| Nail matrix | நக அணித்திரள் / உகிர் அணித்திரள் |
| Anonychia | நகமின்மை / உகிரின்மை |
| Nail Avulsion | நகப் பிறழ்வு / உகிர்ப் பிறழ்வு |

**மரு. முனைவர் அ. யோசெப்யூட்**

| | |
|---|---|
| Pneumocyte | மூச்சுக்கலம் |
| Mast cell | தீனிக்கலம் |
| Dendritic cell | கிளையுருக் கலம் (மரக்கிளையுருக்கலம்) |
| Polymorphonuclear (PMN) cell | பல்லுருவக் கருக் கலம் |
| Blood - air barrier | குருதி வளி இடைச்சுவர் |

**பேரா. பெஞ்சமின் இலெபோ**

| | |
|---|---|
| Escape velocity | விசும்பறு விசை |
| Helium | பருதியம் |
| Welding | ஆசிடுதல் |
| Thermos flask | வெப்பச் சேமக்கலன் |
| Onomatopoeia | ஒலிக்குறிப்பு |

**பேரா. முனைவர் சுபதினி ரமேஷ்**

| | |
|---|---|
| Concentrate | குவிநோக்கு |
| Speech situation | உரைக்களன் |
| Formal situation | முறைக்களன் |
| Bi-variate characteristics | இருமாறியல்பு |
| Mentalisim | மனவியம் |

**தமிழ்த்திரு. சே. பானுரேகா**

| | |
|---|---|
| Jhumka | தொங்குழை |
| Pear Jhumka | மணிமுத்தக்குழை |
| Chateline | இடைக்கொத்தணி / இடைமுத்தணி |
| Cufflink | முன்கையணி |
| Belly chain | இடைமுறுக்கணி |

**திரு. நை. விஜயகுமார்**

| | |
|---|---|
| Epiphany | புத்தெளிவு |
| Geospatial data | புவியிடத் தரவு / புவியிடத் தகவல் |
| Misinformation | மாற்றுத்தகவல் |
| Kapa haka | முக்கலையாட்டம் |
| Chillybin | குளிர்கலன் |

**பொறிஞர் பத்மப்ரியா இராகவன்**

Supercalifragilisticexpialidocious அதிமிகை
Airgasm முகத்திரையின்மை
Coronaspeck இல்லிருப்புச்சதை
Motherese தாய்மை மொழி/தாய்சேய்மொழி
Coronacoaster உள ஊசல்

**பொலிகையூர் ரேகா**

Momos கறியவிமெதுவன்
Shawarma கறிப்பொதிச்சுருள்
E- waste மின்சாதனக் கழிவு
F - Commerce முகநூல் வணிகம்
S - Commerce சமூக வலைத்தள வணிகம்

**கவிஞர் மெய்ஞானி பிரபாகரபாபு**

Framework செயல் வரையறை
Incarnadine இளஞ்சிவப்பு
Deadlock செயல் முடக்கம்
Enshrine போற்றிப் பேணுக
Flagship குழும முதன்மை

**முனைவர் ஹ. அல்தாஜ் பேகம்**

குர்ஆன் இறைக்கூற்று
ஹதீது நபிக்கூற்று
மத்ஹப் நெறி
அன்பியா இறைத்தூதர்கள்
ஜம்ஜம் இறைத்தடாகம்
(பிணிநீக்கநீர்)

**பேரா. முனைவர் பெ. ஹரிபாலன்**

Fluorescence microscope மிளிரும் நுண்ணோக்கி
Live-cell imaging உயிரோட்ட உயிரணு புகைப்படம்
Monocyte ஒற்றைக் குழியணுக்கள்
Glass slides கண்ணாடித் தகடு
Granulocyte வெள்ளை சிறுமணித்துகள்

**திரு. சே. சதீஷ்குமார்**

Sashimi பச்சை மீன்கீற்று
Onigiri பிடிச்சோற்றுருண்டை
(O)Sake அரிசி மது
Futon இலகுமெத்தை
Obonodori நீத்தார்கடன் நடனம்

**பொறிஞர் பெ. செல்வக்குமார்**

soft egg மென்முட்டை
Alone in forest வன ஒன்றி
Natural Talent for language மொழி அறிவன்
Ghost event பேய் விழா
Sausage தொத்திறைச்சி

**திரு. ஆக்கம் அ. மதிவாணன்**

Hoodie கவிப்பு உடை
Casual wear இயல்பு ஆடை
Ready wear உடனணி உடை
Formal wear அலுவல் உடை
Party wear விருந்து அணி ஆடை

**முனைவர் இரா. குறிஞ்சிவேந்தன்**

Jug நீர்ச்சால்
Self-isolation தன் தனிமை
WHO உலக நலவியல் நிறுவனம்
Wind screen wiper வழிக்கை
Self motivation -தன்னூக்கம்

**திரு. சண்முகம் நித்தியானந்தம்**

Longan நுங்கன்
Lychee செந்நுங்கன்
Bread soulfet வைக்கோல்கீரை

**முனைவர் கனகசபை இரகுபரன்**

Updating இற்றைப்படுத்தல்
Clerk எழுதுவினைஞர்
Institute நிறுவகம்
Institution நிறுவனம்
Auditorium கேட்போர்கூடம்

**பேரா. பாலசுந்தரம் இளையதம்பி**

Standby சேமநடிகர்
Jargon துறைமொழி
Prompter அருகூட்டுநர்
Counselling மதித்துணை
Concept chart கருதுபொருட் சட்டகம்

**திரு. நா. சு. சிதம்பரம்**

Armoring கடல்கரை பாதுகாப்பு
Edify தன்னிலை எழுச்சி
Zaftig பருத்த அழகி
Ferrimagnetism இரும்பயல் காந்தவியல்
Alvusion ஆற்றங்கரை பாதிப்பு

**முனைவர் தெ. வெற்றிச்செல்வன்**

Mask முகவுறை
Genome மரபணுமம்
Selective Amnesia தெரிவுமறதி
Parkinsonism நடுக்குவாதம்
Equalent நிகரி

# அகரமுதலி இயக்ககம் சார்பில் சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சி

நாளைய அறிஞர்களாகிய கல்லூரி மாணவர்களிடையே கலைச்சொல்லாக்கத் திறனை மேம்படுத்துவதற்கு ஏதுவாகச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் சார்பில் சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம் செயற்படுத்தப்பட்டுவருகிறது.

இத்திட்டத்தின்கீழ், இன்றைய காலத்தில் நாள்தோறும் பெருகிவரும் பலதுறை சார்ந்த சொற்களுக்கு இணையான தமிழ்க் கலைச்சொற்களை உருவாக்குவது குறித்துத் தேர்ந்த அறிஞர்களைக் கொண்டு கல்லூரி மாணவர்களுக்குப் பயிற்சியளித்து, 'சொற்குவை மாணவத் தூதுவர்' என்ற அரசு சான்றிதழும் வழங்கப்பட்டுவருகிறது.

அந்தவகையில், 30.12.2021ஆம் நாள், சென்னை இராணிமேரி கல்லூரியில் நடைபெற்ற சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சி வகுப்பில், அகரமுதலி இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் தொடக்கவுரையாற்ற, கல்லூரி முதல்வர் முனைவர் பா. உமாமகேஷ்வரி அவர்களும், மதுரை உலகத் தமிழ்ச் சங்கத்தின் மேனாள் இயக்குநர் முனைவர் க. பசும்பொன் அவர்களும் வாழ்த்துரை வழங்கினார்கள்.





முனைவர் சு. தமிழ்ச்செல்வி


முனைவர் மு. கண்ணன்


முனைவர் மா. பூங்குன்றன்


புலவர் வெற்றியழகன்


முனைவர் பா.உமாமகேஷ்வரி


முனைவர் கா.மு. சேகர்


முனைவர் க. பசும்பொன்

பயிற்சி வகுப்பில், தொல்காப்பியத் தமிழ்ச் சங்கத் தலைவர் புலவர் வெற்றியழகனார் “தூயதமிழும் இலக்கணமும்“ என்ற பொருண்மையிலும், தமிழ்வளர்ச்சித்துறை மேனாள் இயக்குநர் முனைவர் கா.மு. சேகர் அவர்கள் “இலக்கியத்தில் கலைச்சொற்கள்“ என்ற பொருண்மையிலும், மைசூர் இந்திய மொழிகளின் நடுவண் நிறுவன விரிவுரையாளரும் இளநிலை ஆய்வு அலுவலருமான திரு. லோ. இரா. பிரேம்குமார் அவர்கள் “தரவு சேர்த்தியம்“ என்ற பொருண்மையிலும், அகரமுதலி இயக்கக மேனாள் பதிப்பாசிரியர் முனைவர் மு. கண்ணன் அவர்கள் “அகராதியியலின் நோக்கும் போக்கும்“ என்னும் பொருண்மையிலும், அகரமுதலி இயக்ககப் பதிப்பாசிரியர் முனைவர் மா. பூங்குன்றன் அவர்கள் “ மொழியியல் சொற்பிறப்பு கலைச்சொல்லாக்கம்“ என்னும் பொருண்மையிலும் கருத்துரை வழங்கி, மாணவிகளுக்குப் பயிற்சியளித்தனர்.

பயிற்சி பெற்ற மாணவிகளுக்குச் ‘சொற்குவை மாணவத் தூதுவர்’ சான்றிதழும் வழங்கப்பட்டது. தமிழறிஞர்கள், பேராசிரியர்கள் உள்ளிட்டோர் பங்கேற்ற நிகழ்வின் நிறைவாக, இராணிமேரி கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் சு. தமிழ்ச்செல்வி அவர்கள் நன்றிகூறினார்.


திரு. லோ. இரா. பிரேம்குமார்